# பால சம்வாத

# வினு விடை





பொன்விழா
நினைவு நூல்

ஸ்ரீ:

ஏர்பூத்த திருமுடியி னழகும்பு யவர்புகழும்
இயல்வதன மலரினழகும்
எழிலொழுகு நெற்றியினி லினியதிரு மணியினழகும்
இன்பமிகு கருணை பொழியும்
சீர்பூத்த இருவிழியி னழகும்பகு நூல்கள்புகல்
செவ்வாயி னழகும் பணைசத்
திருமாலை யோடுவன மாலையலசை யழகுமது
செறியும் களத்தினழகும்
தார்பூத்த தோளழகு மார்பழகு மட்டுவிரி
சலசக்கரத்தி னழகும்
சார்பவர்கள் பற்றென்னும் இருதாளி னழகும்
சழக்கனேன் காணஅருள்வாய்
பார்பூத்த அன்பர்களின் நெஞ்சமலர் வாசனே
பகர்புதுவை நகர்வாசனே
பாவாணர் சொற்றிடு மிராமா நுசப் பெயர
பாரோர்தமக் கமுதமே.

வி. புதூர். வித்வான்.
முதுபெரும்புலவர். திருவாளர்,
கி. வேங்கடசாமி ரெட்டியார்.

Scanned by CamScanner

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுனயே நம:

# பால சம்வாத விஞ விடை

என்னும்

# புருஷார்த்த தீபிகை

புதுவை விலக்ஷணகவி

ஸ்ரீமத் ஏ. வே. இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள்

அருளிச்செய்தது.

பண்ணுருட்டி

ஸ்ரீமத் ராமாநுஜ நாவலர் சபையின்

ஸ்ரீ வைணவ மகாநாட்டின் ஐம்பதாம் ஆண்டு

நினைவுநூலாக வெளியிடப்பட்டது

"பொன்விழா நினைவு நூல்"

1925—1975

தலைவர்

மகாவித்வான் முதுபெரும் புலவர்.

திரு. கி. வேங்கடசாமி ரெட்டியார், வி. பூதூர்.

காரியதரிசி

திரு. ப. சீநிவாசம் பிள்ளை, பண்ணுருட்டி

காலத்திநற் செய்த உதவியாக
இந்நூலைப் பதிப்பித்துத் தந்த
இரத்தினம் பிரஸ்
அதிபர்களுக்கு
நன்றி.



# நாவலர் சபை பொன் விழா

ஆனந்தஸு பங்குனிமீ 18உ
செவ்வாய்க்கிழமை (1—4—1975)

விலை ரூ. 2-25.

ஸ்ரீ:

ஸ்ரீபாத்மோத்தர புராணத்தில் புதுவை விலக்ஷணகவி

ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் அருளிய

# அஸ்மதாசாரியர் தோத்திரம்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

கருக்காணி லுழன்றுகதி வழிக்குமுறை தெரியாக்கண்
கலக்க மெல்லாம்
முருக்காடு மருட்கோவீந் தழிவின்முத்தி நகர்நாட்டம்
மூவர் போற்றும்
திருக்கோவ லூருளுறைந் தெழிற்பிரம ரதமூரும்
சீநி வாசக்
குருக்கோன்ற னடிப்போதெம் முடிசூடிக் களித்தாடிக்
குறைகள் தீர்வாம். 49

### கலி விருத்தம்

பாவ மென்செய்யும் பற்றிய மும்மைவெந்
தாவ மென்செயும் சண்டனு மென்செயும்
தேவ தேவன் திரிவிக் கிரமன்வாழ்
கோவ லூர்நங் குரவனைக் கூறினே. 50

### ஸ்ரீசுதரிசனகிரிபுராணத்தில், திரிபுர அதிகை சரந்தந்த பெருமாள் துதி

உரந்தரு புரமூன்றினை முறித்துயர்வான்
உன்னுபு அரங்கனைப் பரவிச்
சிரந்தரு சடையைச் சமிதையா வேட்டலுழிச்
சிவன் களிப்புறத்தோன்றி
வரந்தரு வைனதேயமா வுந்தி வடக்கமர்
அதிகைமா நகர்வாழ்
சரந்தரு பெருமாள் தனைநினைத் தவரேழ்
பவவினைப் பரவை சாய்த்தவரே. 5

## புதுவை விலக்ஷணகவி ஸ்ரீமத் இராமானுஜ நாவலர் ஸ்வாமிகள்
## ஆசார்ய பரம்பரை திருக்கோவலூர் மடம்

| | | |
|---|---|---|
| 1 | ஸ்ரீ எம்பெருமானார் ஜீயர் | கி. பி. 1521 to 1569 |
| 2 | ஸ்ரீ திருமலைநம்பி ஜீயர் | 1569 — 1594 |
| 3 | ஸ்ரீ லக்ஷ்மணமுனி ஜீயர் | 1594 — 1611 |
| 4 | ஸ்ரீ நம்புலாசாரிய ஜீயர் | 1611 — 1627 |
| 5 | ஸ்ரீ விருத்தஎம்பெருமானார் ஜீயர் | 1627 — 1650 |
| 6 | ஸ்ரீ வெங்கடபதி ஜீயர் | 1650 — 1655 |
| 7 | ஸ்ரீ திருவேங்கடபதி ஜீயர் | 1655 — 1666 |
| 8 | ஸ்ரீ சிறியதிருமலைநம்பி ஜீயர் | 1666 — 1709 |
| 9 | ஸ்ரீ வெங்கடாசாரிய ஜீயர் | 1709 — 1736 |
| 10 | ஸ்ரீ நம்புலாசாரிய ஜீயர் | 1736 — 1754 |
| 11 | ஸ்ரீ நைநாராசாரிய ஜீயர் | 1754 — 1769 |
| 12 | ஸ்ரீ ஸ்ரீநிவாசாசார் ராமானுஜ ஜீயர் | 1769 — 1781 |
| 13 | ஸ்ரீ நம்பிள்ளை ராமானுஜ ஜீயர் | 1781 — 1789 |
| 14 | ஸ்ரீ ஸ்ரீராமானுஜ ஜீயர் | 1789 — 1793 |

### கிரகஸ்தாச்ரமம்

| | | |
|---|---|---|
| 15 | ஸ்ரீ நைநாசாரியஸ்வாமி | 1793 — 1808 |
| 16 | ஸ்ரீ எம்பெருமானாச்சாரி ஸ்வாமி | 1808 — 1824 |
| 17 | ஸ்ரீ வெங்கடாச்சாரி ஸ்வாமி | 1824 — 1828 |
| 18 | ஸ்ரீ ராகவாச்சாரி ஸ்வாமி | 1828 — 1842 |
| 19 | ஸ்ரீ நைநாராச்சாரிய ஸ்வாமி | 1842 — 1853 |
| 20 | ஸ்ரீ ஸ்ரீநிவாசாச்சாரிய ஸ்வாமி | 1853 — 1871 |
| 21 | ஸ்ரீ திருவேங்கடராமானுஜாசாரி ஸ்வாமி | 1871 — 1892 |
| 22 | ஸ்ரீ ஸ்ரீநிவாசாசார ராமானுஜாசார் ஸ்வாமி | 1892 — 1920 |
| 23 | ஸ்ரீ வீரராகவாசாரி ஸ்வாமி | 1920 — 1943 |
| 24 | ஸ்ரீ திருவேங்கடகிருஷ்ண ராமானுஜாசாரி ஸ்வாமி | 1944 நவம்பர் 6ம் தேதி |

శ్రీ వరవరముని వ్రవణ విజయము. ఆశ్వాసము

౪. నా దాసులు నా కన్నులు

నా దేహం బాత్మనములు నా కంటెషునల్

నా దాసుల నిందించిన

మీ దాసత్వంబు చాలు మేల్ మేలరయున్.

## "நம் நாவலர் பெருமானின் ஒப்பற்ற பெருமை"

சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர் தனித்தமிழ் படித்து பெரும்புலவராக இருப்பவர்களுக்கு மதிப்புஇல்லா மலே யிருந்தது. தமிழோடு ஆங்கில பட்டதாரியாகி உத்தியோகத்தில் இருப்பவர்களைத் தான் மதித்து வந்தார் கள். அக்காலத்தில் சமயக்குறிகள் அணிந்து கொண் டுள்ளவர்களையும் ஏளனமாகப் பேசினார்கள். அந்நிலை யிருந்த காலத்தில் நம் நாவலர் பெருமான் பன்னிரண்டு திருமண்களை அழகாக அணிந்து கொண்டும் வைதீக உடை உடுத்திக்கொண்டும் அனுஷ்டான பரராய் அறி ஞராய் பெரும்புலவராய் பாவலராய் நாவலராய் நாட்டுக்கு ஸ்ரீவைஷ்ணவ தத்துவத்தை உபதேசித்துக் கொண்டும் உபன்யசித்துக் கொடும் ஊர் ஊராகச் சென்று மக்களைத் திரட்டி பஜனை செய்து கொண்டும் தகுதியால் ஆசார்ய புருஷராகத் திகழ்ந்தார். பல சிஷ்யர்கள் சேர்ந்தார்கள். பிறமதத்தினரும் வைணவத்திற் சேர்ந்தார்கள். பல பெரிய சிறந்த நூல்களை செய்யுள் உருவத்திலேயும் கீர்த்தனைகள் வடிவத்திலேயும் சாமான்யர்களுக்கும் படித்த வர்களுக்கும் சம்பிர தாயஸ்தர்களுக்குமாக தமிழ் வசன மாகவும் மணிப்ரவாளமாகவும் இயற்றி மக்கட்கு வழங் கியும் பதிபித்தும் உதவினார்கள். அக்காலத்திலிருந்த

பெரும் புலவர்களும் உத்யோகத்திலுள்ளவர்களும் வியந்து ஈடுபட்டார்கள் சைவ வைணவ ரனைவருமே நாவலர் பெருமான் நூல்களுக்கு சாற்றுக்கவிகள் தந்தார்கள். பிராம்மணர்கள் ஆசார்ய புருஷர்கள் எல்லாரும் வட மொழியிலும் சாற்றுக்கவிகள் வழங்கினுர்கள் அவை களைத் தொகுத்துப் படித்தோமானுல் நாவலர் பெருமான் சிறப்பு நமக்கு நன்ருகப் புலனுகிறது. சுருக்கமாக இரண் டொன்று காட்டுகிறேன்.

சென்னை போதனுசக்தி விர்த்தி வித்தியாசாலை என் னும் தமிழ்த்தலைமை புலவர் திருவாளர் கோ. இராச கோபாலப் பிள்ளை அவர்கள் "வைணவதத்துவ" நூலு க்கு அளித்த சாற்றுக்கவி.

"என், முழுவலன் பிற்றெருடராமாநுச
நாவலன் கழலென் முடியிற் சேர்த்தித் தொழுவலன்ரு
மெனிற் கைம்மாறியாது கொலோ
தொகுத்துணர்ந்து துணியுங்காலே.

என்று கூறுகின்ருர்.

"திருச்சித்திர கூடத்தல புராணத்து"க்கு சாற்றுகவிகள் வழங்கிய ப்ரபந்த வித்வான் பள்ளிக்கொண்டான் பிள்ளையவர் கள் 7வது பாட்டில்.

இத்தகைய பேருதவி யியற்ரும லியற்றினருக்கு எண்ணுங்காலை
ஒத்தகைம்மா றென்றுமில தெனவுணர்ந்து முனுற்றுதியென்று
ட்ற்றியென்முன
தத்துகின்ற தனிநெஞ்சே யஞ்சலிதான் தக்கதெனத் தருதியேனும்
உத்தமமா மணிக்கலகூர்க்க ருணபல மொப்பெனலை யொக்கு
மன்றே.

என்று கூறுகின்ருர்.

"ஸ்ரீ சுதர்சனகிரி புராணம்" சாத்துகவியில் ப்ரபந்த வித்வான் ஸ்ரீமான் காஞ்சிபுரம் ராமஸ்வாமி நாயுடு அவர்கள் இயற்றிய பன்னிருசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தத்தில் சீரேறுபூம் பொழில்........நிகரில் தென்மொழி யிலருள் செய்தற்கு அஞ்சலி நிகழ்த்தி யுய்ந்திடுது மன்றே

என்கின்றார்.

"ஸ்ரீபகவந்நாம சங்கீர்த்தன" சாற்றுக்கவியில்
அரியாங்குப்பம் உபாத்தியாயர் திருமழிசையாழ்வார்
இயற்றியது.

நேரிசை வெண்பா

கார்மலி தெண்ணீருலகில் கற்றமுனிவோர் பரவும்
சீர்தருவார் மார்பன் திருவடிமேல்—ஏர்மலிந்த
ஆவலாய்க் கீர்த்தனைகள் ஆற்றிய ராமாநுசப் பேர்
நாவலன்றுள் நெஞ்சேநீ நாடு.

பதினன்குசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

தரைதனில் மருள்செய்வீர சைவத்திற்
சிக்கியே குருக்கள் தாளலம்பும்
தாரைநீரிலிங்கச்சிவ சிரத்தூற்றித்
தாழடியேற்கு அருள்சுரந்து
புரையற அனைத்தும் பூத்தவனுகிப்
புகழ்மறைப் பிரணவப் பொருளாய்
புவனமுண்டளந்து காப்பவனுகிப்
போற்றிடற்கினியன் பொன்னடிநீள்
சிரமதிற் கொளுமாறு ஈந்தவராகிச்
சின்மயானந்த வீடளிக்கும்
சீபதிசமயத்தாக்கி நாயேற்குத்
திருமழிசைப் பெயர்கொடுத்து
வரமுறு ராமாநுசனெனு நாவலர்க்
கடியேன் குடிமுற்றும்
வாழ்த்தலிட்டேத்தலன்றியென்
கைம்மாறு யேற்றிடற்குரியனே அறியேன்.

என்ற இவர் பாவால் நாவலர் பெருமை விளங்கும்.

ஸ்ரீபகவந்நாம சங்கீர்த்தனம் சாற்றுக்க களியில் சொற்கபுரம்
திருவாளர் இராமலிங்கத் தம்பிரானவர்கள் இயற்றிய

நேரிசை வெண்பா

படியளந்த மாயன் பாச்சரிதம் வைத்துக்
கெடிபெறுரா மாநுசன் செய் கேழ்நூல்—படிமீதில்
பாடியதைக் கேட்டுபர மானந்தத் தால்கூத்
தாடினுன் அன்ருே அரன்.

என்கின்ருர் கவனிக்க.

வேதாந்த தேஇகப்பிள்ளை அவர்கள் இயற்றியது
கலிவிருத்தம்.

நாடு ராமாநுச நாவலன் கழல்
சூ டுதும் சிரமிசைத்துள்ளி யெங்கணும்
ஆ டுதும் அவள்புகழ் அமைத்துப் பண்ணிடை
பாடுதும் எமைநிகர் பாரில் யாவரே.

என்கின்ருர்.

காட்டப்புத்தூர் ஸ்ரீமான் விஜயராமாநுஜ தாசரவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

வாழியவன் சீர்த்தி வாழியவன் மெய்யடியார்
வாழியவ ஞேதிய மும்மைதமிழ்—வாழியரோ
சீரார்புதுரவை வரும் செம்மலிராமாஜனும்
பேரார் குரவன் பெரிது.

என்று போற்றுகின்ருர்.

இப்பெரியோர்கள் இயற்றியருளிய பாடல்களின் கருத்தைக் கொண்டே அத்தனை பாடல்களையும் படிக்க விரும்புகின்ருேம் நாவலர் பெருமானுடைய காம்பீர்ய தோற்றத்தையும் கவிநயங்களையும் கல்வித்திறமையையும்

உபதேசங்களையும் திருச்சித்திரகூடத்தல புராணத்தில் 7 பாடல்களால் ப்ரபந்ந வித்வான் கொ. பள்ளிகொடான் பிள்ளையவர்கள் வர்ணிக்கின்றார். நம் உள்ளம் பூரிக்கின்றது. சாற்றுகவிகள் வடமொழி தென்மொழி கவிகள் அனைத்தும் தொகுத்து பதிப்பித்தால் நம் போன்றார் பயன் பெறுவர் வடமொழி கவிகளை உரையுடன் பதிப்பித்தால் சாலச்சிறந்தது திருவருள் கைகூட்டி வைக்குமாக.

இங்ஙனம்,

**K. நாராயண ரெட்டி**

நாவலர் பெருமான் திருவடிகள் வாழ்க.

ஸ்ரீ:

*ஜீயர் திருவடிகளே சரணம்*

# "அன்பு மொழி"

திருமால் திருவருளால் நம்பெரியோர்கள் இப் பண்ணுருட்டியில் புதுவை விலக்ஷகவி ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் சபையை 1925ம் ஆண்டு தோற்றுவித்தார்கள். இச்சபையில் ஒவ்வோராண்டும் நம் நாவலர் பெருமான் திருவவதரித்த நன்னாளான பங்குனி கேட்டை திரு நக்ஷத்திர விழா செய்து கொண்டும் ஸ்ரீவைஷ்ணவ மகாநாடு நடத்திக் கொண்டும் வருகின்றோம். அம்மகா நாட்டில் பல பெரியோர்கள் தலைமை வகிப்பதும் பல சான்றோர்கள் உபன்யாஸம் செய்வதும் பல கிராமங்களில் இருக்கும் பாகவதோத்தமர்கள் வந்து கேட்டு இன்புறுவதும் தொடர்ந்து நடந்து கொண்டு வருகின்றது. இச்

சபையில் இயன்ற வரையில் ஸ்ரீவைஷ்ணவ நூல்கள் வெளியிட்டும் வருகின்றது. அதாவது "ஸ்ரீ நம்மாழ்வார் பஞ்சரத்தினம்," வி. பூதூர் வித்வான் திருவாளர் கி. வேங்கடசாமி ரெட்டியார் இயற்றியருளிய "ஸ்ரீஇராமாநுஜ நாவலர் பதிகம்" பல சான்றோர் கட்டுரைகள் நிறைந்த "வெள்ளி விழா மலர்" "ஸ்ரீவைராக்கிய சூரியோதயம்" "ஸ்ரீவைஷ்ணவ தீபிகை" "ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் திவ்ய வைபவ சங்க்ரகம்" வெளியிட்டிருக்கின்றோம். இப்போது "பொன் விழா நினைவு நூலாக பால சம்வாத வினாவிடை" வெளியிடுகின்றோம். நாவலர் பெருமான் திருவருள் கொண்டு இயற்றியருளிய ஸ்ரீவைஷ்ணவ பொக்கிஷமாகிய "ஸ்ரீபாத்மோத்தர புராணம்" பதிப்பித்து வெளியிட எண்ணியிருந்தோம். காகித விலை ஏற்றத்தினால் அது இயலாமற் போயிற்று நாம் எல்லோரும் சேர்ந்து அந்த "ஸ்ரீபாத்மோத்தர புராணத்தை"யும் பதிப்பித்து நம் நாவலர் பெருமான் திருவருளுக்குப் பாத்திரராக வேண்டும். அன்று ஒரு பெரியாரே பதிப்பித்து செயற்கரிய செயலைச் செய்து பேறுபெற்றார். அச்செயலை நாமனைவரும் செய்து இன்று பேறுபெறுதல் நன்று. திருவருள் கூட்டி வைக்குமாக.

இப்படிக்கு,

ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் சபையார்
பண்ணுருட்டி.

ப. சீநிவாசம் பிள்ளை
காரியதரிசி,
ஸ்ரீமத் ராமானுஜ நாவலர் சபை
பண்ணுருட்டி.

வைதீக மதத்திற்குக் காரணமான வேதங்களின் கொள்கைகளைத் தெள்ளத் தெளிய விளக்குகின்ற பதினெண் புராணங்களில் சாத்வீகத் தன்மையுள்ள புராண ரத்னமான விஷ்ணு புராணத்துடன் ஒத்ததான "ஸ்ரீ பாத்மோத்தர புராணம்" தமிழில் இல்லாத குறைதீர புதுவை விலக்ஷணகவி. ஏ. வே. ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் அவர்கள் சீரிய செய்யுள் வடிவில் செய்தருளியுள்ளார்கள். அது கி. பி. 1869 சுக்கில வருடம் புதுவை மகா-ா-ா-ஸ்ரீ பாகவதோத்தமர். பு. லோ. பொன்னரங்கம் பிள்ளையவர்கள் ஒருவரே தம் பொருட்செலவில் பதிப்பித்து ஸ்ரீ வைஷ்ணவ தமிழுலகிற்குப் பேருதவி செய்தார்கள். சைதாபுரம் சோமசுந்தர முதலியாரது ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது அந்நூல்.



**படலங்கள் *71* திருவிருத்தம் *4123***

| | |
|---|---|
| ஸமஸ்க்ருத வித்வான் 13 திருநாமங்கள் கொடுத்த சாற்றுக்கவிகள் | 27 |
| தமிழ் வித்வான் 25 திருநாமங்கள் கொடுத்த சாற்றுக்கவிகள் | 56 |
| ஆகமொத்தம் பாடல்கள் | 4206 |

**இப்போது பதிப்பிக்க வேண்டிய தேவையில் இருக்கிறது.**

**வள்ளியோர் பொருள் வழங்குக.**

ஸ

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

புதுவை ஸ்ரீ வைஷ்ணவ நம்பிகள் அருளிய

தனியன்கள்

ஸ்ரீ நிவாஸ தயா பாத்ரம் ஸௌகுணக்ஞான பூஷணம்
ஸதாசார ரதம் நித்யம் ராமாநுஜ குரும் பஜே.

வெண்பா

காலன் குறுகான் கடும்பிறவி சாராது
மாலின் தனிச்சுகத்தில் மன்னிடலாம்—சீலமுறும்
பாவமிலா நெஞ்சேநீ பண்பனி ராமாநுஜனும்
நாவலன் செந் தாமரைத்தாள் நாடு.

தத்துவங்கள் மூன்றுந் தனிமந் திரமூன்றும்
இத்தகைய வென்றுணர்ந்த வெந்நெஞ்சே—நித்தநித்தம்
சாற்றுதிரா மாநுஜனும் சாந்தகுண நாவலன்சீர்
போற்றுதியன் னுன்சரணப் (பூ).

ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் தேசிகன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:



ஸ்ரீமத் சடகோபாய:நம:

# பால சம்வாத வினு விடை

## கடவுள் துதி

உலகளித்தழித்தாக்கிடுவோனெவன்
நிலம்வளிக்கனனீர் வெளியைந்தெவன்
அலகிலாவுயிருள்ளறி வன்னவன்
சலச நற்கழலேத்தலை சூட்டுவாம் 1

எவன் முதற்குணமுற்ற பிறப்பிலி
எவனுயிர்த்திரளாயு முயிர்ப்பிலி
எவனனைத்துஞ் சலித்துஞ் சலிப்பிலி
அவனெழிற் சரணம் துதிப்பாமரோ 2

உலகாதிதன்ன தருளாலியற்றியுணர் பக்வமானவுயிரை
இலகாதியந்த மறுமோனஞான வியல்பைத்தெரிந்து வினைகள்
பலகாதியுற்ற தனிவீட்டினின்று பரமாவிருப்பவினிமை
விலகாதிலங்கும் வகைசெய்யுமீசன் மிளிர்பாதபத்மம் நினைவாம் 3

பரிதிசூழ் ஜகத்தைப்படைத்து மற்றதனைப்
பரிந்தளித்தழிப் பவனெவனே
கருதியவுயிர்க்குத் தலைவனுயதற்குக்
கதியினையளிப் பவனெவனே
சொரிதல் செய்கருணை வாரியாயெங்கும்
சூழ்ச்சியாயிருப் பவனெவனே
விரதராநெஞ்சத்தவனை யெந்நாளும் 4
விளங்குறக்கண்டு கண்களிப்பாம்

கோல சம்போக விடங்கர் கொதித்தெற்றல் செய்கையிற்
சீலசம்பூதசிதாதி மூலமென்று செப்பியக்
காலசியமில்லாதருட் கண்ணன் தனைப் போற்றியே 5
பாலசம்வாதமெனும் ஒருநூல் பகர்வாமரோ

கருக்குழிவீழுயிர் களெலாங்கடவுள் கதியிலையெனு மோர்
கங்குனீங்க
வருக்கனெனவறிவொளிர் செய்யணி பாலசம்வாத
முரைக்கவேண்டி
இருக்குமுதனுன் மறையினிருந்த பொருளினைத் தமிழா
லியற்றித்தந்த
திருக்குருகைச் சடகோபன் செழுஞ்சரண மலர்தலையிற் 6
சேர்ப்பன்மாதோ

## நூல்

வினு: இவ்வுலகத்தில் நற்கதியடைதற்கு ஏதுவாக இருக்கின்ற பொருளை, நாம் முக்கிய காரணமாகச் சம்பாதிக்க வேண்டியது அவசியமானதால், அதற்குரிய அரும் பொருளாக எதைக் கைப்பற்றி சித்தியடையலாம்?

விடை: கார்மலி கடல்சூழ் பார்வளமுறவாழ் கருணையறிவடக்க வொழுக்கங்களா லுயர்ந்த கல்வியில் களிப்புள்ள பெரியோர்களும், ஈண்டு சொல்லக் கிளிப்

பிள்ளை போலும் யான் சொல்லச் செவிகொடுத்துக் கேழ்க்கத் தக்கதொன்றுண்டு.

வினு: அஃதியாது.

விடை: எவற்றினு முக்கியமாகிய மானிட தேகம் கிடைப்பது அரிது. அப்படி கிடைத்தபோதிலும், பாப புண்ணியங்களைப் பகுத்தறிந்து நித்தியாநித்திய வஸ்து விவேக முண்டாய் உயிர்கள் முமுக்ஷுத்துவ மென்னும் மோக்ஷப் பிராப்தியாகும்படி அறிவை விளக்குந்தன்மை யாகியவோர் கல்விப்பொருளை யொருவன் சம்பாதித்தல் மிகவுமரிது. ஆதலாற், செல்வப் பொருளினும் கல்விப் பொருளே மேன்மை.

வினு: செல்வப் பொருளைப் பார்க்கிலும் கல்விப் பொருளே மேன்மை யென்பதற்கு உதாரண முண்டோ?

விடை: உண்டு.

வினு: அஃதெவ்வாறு?

விடை: பாடல்.

தெள்ள முதமனைய கல்விப் பொருள் படைத்திடிற்
தேச மெல்லாந் துதிக்கும்
செயஸதம்பமான புகழ் நிலை நிற்கு மிவையலாற்
செம் பொன் மிகு செல்வ மது போல்
வெள்ள மது கொள்ளு மெனும் பயமில்லை கனலினல்
வெம்பவரு சலன மில்லை
வேந்தர்கள் பறித்திடக்கூடாது சோதரர்
விரும்பினும் பங்குருது

கள்ளராற் றிருடவும்முடியாது வரவரக்
கனமலாற் குறைவுருது
கருணைஞானந் தழையுமா கையாலுனையிதய
கமலத்தில் வைப்பதெளிதாம்.

என்று வெண்மணி நாராயண பாரதியார் சதகத்திலும்

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியினூங் கில்லைச்
சிற்றுயிர்க் குற்றதுணை

என்று நீதிநெறி விளக்கத்தினும், இன்னுமனேக சாத்திரங்களினும், கூறியிருப்பதைக் கண்டுணர்வாயாக.

வினு: அங்ஙனமாயின், அக்கல்வியினுலன்றி நித்தியா நித்திய வஸ்துக்களைப் பகுத்தறியுமறிவு தோன்ருதோ?

விடை: ஒரு காலத்துந் தோன்ருது.

வினு: இதற்கு மேற்கோளுண்டோ?

விடை: உண்டு.

வினு: அஃதெவ்வாறு?

விடை: பாடல்.

தொகுத்தநூற் பலகல்லாற்குச் சுயம்பொரு ளின்னதென்று
பகுத்திடுமறிவு தோன்ருதென்றனர் பண்புளோரே
என்று ஓர் உத்தமப் பாவினும்

தொட்டணைத்தூறும் மணற்கேணி மாந்தர்
கற்றனைத் தூறு மறிவு
என்று திருவள்ளுவநாயனுரும்

**நீரளவே** யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம்

என்று ஒளவையார் மூதுரையிலும், சொல்லப் பட்டிருக்கின்றது.

*விஞு: அங்ஙனமாயின், "கற்றது கைம்மண்ணளவு கல்லாததுலகளவு, வுற்றகலை மடந்தை ஓதுகிருள்." என்றபடி, இவ்வுலகத் தெவ்வளவு சாத்திரங்களிருக்கின்றனவோ அவ்வளவும் ஒருவன் ஓதி உணர்ந்தன்ரே பேரறிவைப் பெற வேண்டும்.*

விடை: அங்ஙன்மன்று.

*விஞு: மற்றெங்ஙனம்?*

விடை: நன்றறிவுற வெண்ணிய வொருவன் ஒன்ருகக் கலந்த பாலையும் நீரையும் பிரித்துண்ணும் அன்னப் பறவை போலச் சாத்திரங்கள் அனேகமாய் விரிந்துளவாயினும், விசிஷ்ட வேதாந்த விசாரமாட்சிமை பொருந்திய பெரியோர்களால் அங்கீகாரம் செய்யப்பட்ட வஸ்து விவேகத்தைத் தரத்தக்க ஈசுவர நிச்சய முணர்த்தும் சாத்திரங்களே பேரறிவை உண்டுபண்ணத் தக்கவைகள்.

*விஞு: இதற்கும் மேலோர் கூறிய வாக்கியப் பிரமாணம் யாது?*

விடை: பாடல்.

**"பொறிமிகுத்த பெரிய ருரைகொளில், அறிவுமிக்க அடைகு வராதலிற், செறிவு தீமையர் செய்த சிற்றின்பநூல், சிறுவரன்றி சிறிதுங் கொளார்புதர். என்ரே இதிகாசத்தினும்.**

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்தமைவுடைய கற்பவே நீரொழிய
பாலுண்குருகிற்றெரிந்து

என்றும்

அலகுசால் கற்பினறிவு நூல்கல்லாது
உலகு நூலோதுவதெல்லாம்—கலகல
கூஉந்துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந்துணையறிவாரில்

என்று நாலடியினும், சொல்லியிருப்பதால், இவை யெல்லா முணர்ந்த எங்களாரியர் எங்களை நன்னெறியிற் செலுத்த வேண்டி யதிகப் பிரயாசை யெடுத்துக்கொண்டு "பால சம்வாத வினு விடை" யென்றெரு நூலியற்றித் தந்தார்.

வினு: அப்படிப்பட்ட வசனமானது எத்தன்மையது? அதிற்சொல்லிய விசேஷங்களைத் தொகுத்துச் சொல்லும் பார்ப்போம்?

விடை: ஸ்த்ரீகளே தெய்வம், அவரைக் கூடும் சிற்றின்பமே இன்பம். கடவுள் இல்லவே இல்லை. சாத்திரங்களெல்லாம் பொய். ஒரு கருத்தாயிருப்பான் எனில், அவன் செய்யும் உபகாரம் யாது? அவனை நினையாததனுல் வருங்கதி யாது? அதருமம் என்பது யாது? இச்சரீரத்தில் ஆத்மாவுக்கு வேறு சரீர முண்டா? மரண வேதனை எப்படிப்பட்டது? யமதூத காலகண்ட நரகாதி யாவை? மோக்ஷ ஹேது யாது? என்ற சங்கைகட்கு விரிவாகவும், சுருக்கமாகவும் சுருதியுக்தி அநுபவத்தோடும் உத்தரங் கூறி யிருக்கின்றனர்.

வினு: ஆயின் அதை நன்ருக விரித்துரைக்க அவா வுற்றனம் ஐயா.

விடை: இந்நூல் சிலர்க்கு இதத்தையும், சிலர்க்கு அகிதத்தையும், கொடுக்குமே யென்று ஐயுறுகின்றனம்.

வினு: அஃது என்னேக்கியோ?

விடை: சந்திரிகை எல்லோர்க்கும் களிப்பைத் தருவதாயினும், இரவில் பரஸ்த்ரீகளைக் குறித்துச் செல்லும் காமிகட்கும், பிறர் பொருளைக்கவர்வதற்குச் செல்லும் கள்வர்கட்கும், அந்தச் சந்திரிகை எப்படி சத்துருவாகத் தோன்றுமோ அது போல, இந்த பால சம்வாத மென்னும் நூலானது பொருமையுள்ளவர்கட்குப் பொருள் உண்மை தோன்ருது என்னும் பழமொழிக்கு இணங்க இருக்கும்.

வினு: நீர் சொல்லிவந்த வார்த்தைகள் எல்லாஞ் சரிதான். ஆனுலும், இவ்விடத்து வந்திருப்பவர் அறிவிற் சிறந்த சாந்தசீல சிகாமணிகளாதலால், தாம் முன் கூறிய பொருமை முதலிய துர்க்குணங்கள் இவ்விடத்து உண்டா வதற்கு ஏதுவில்லை. ஆதலால், உங்களாசிரியர் நேரிட்ட சங்கைகட்குக் கூறியிருக்கும் நியாயங்களை எனக்கிருக்கும் சங்கைகட்கு உத்தரமாகக் கூறும்படி மிக விருப்பங் கொண்டிருக்கின்றேன்.

விடை: அப்படி நீர் விரும்பினது உண்மையானுல் உம்முடைய சங்கையை வெளிப்படுத்தலாம்.

வினு: ஐயாவே! இந்த ஜகத்து வேருெரு புருஷனுல் அதிஷ்டிக்கப்பட்டு இருக்கின்றதென்றும், சுவாபாவிகத் தன்மையுடையதென்றும், இவ்விரண்டில் ஒன்றைத் தெரிந்து கொள்ள எண்ணங்கொண்டேன்.

விடை: நேசமோடு அவ்விசனைத் தொழுது ஆசையோடு சொல்லுமிப் பிரசங்கத்துக்குச் செவிகொடுப்பது பாங்கென்று பெரியோர் அங்கீகரிப்பார் என்று யிச்சயித்துச் சொல்லுகிறதாவது; சீர் கொண்டுலவும் திடமொன்றிய நேர்நின்றசையுஞ் சடமின்றிய சராசரம் படைத்த நிராமயனளித்த புராதனமான தராதலத்திருக்குந் தாயகம் ஒத்த நேயர்களே!

நெறிநின்றறியா அறிவிற்சிறியன் பல கலை கற்று வெல்லத் துணிந்தோர் போல் சிலகலைகற்றுச் சொல்லத் துணிந்தேன். அதனைப் பிள்ளை சொல்லினுள்ள பிழை போல் எள்ளத்துணியாது என் வெள்ளைச் சொல்லின் உள்ளப் பொருளைக் கொள்ளக் கடவீர்.

அது சர்வ ஜீவரக்ஷகார்த்தமாய், திரிமூர்த்தி சொரூபமாய்த் தனக்குத்தானே யொப்பானவராய், ஆதியந்த மற்றவரூபியாய், சகல நன்மை சொரூபியாய், சர்வகாரண சர்வலோக சர்வக்ஞத்வ ஜகத் வியாபியாய், எல்லாவுயிர்கட்கும் காரணபூதராகிய, பிதாவான ஈசுவரன்; நமக்குச் செய்திருக்கும் நன்மையை விசாரித்தறியாமல் அஞ்ஞானத்தால் அனேகமூடர்கள் அக்கடவுளை மறந்து இறுமாப்படைந்திருப்பதை யெண்ணிப்பார்த்தால், எனக்கே நகைப்பும், சலிப்பும், அழுகையும், சினமும், ஆச்சரியமும் ஆராமையு முண்டாகுமானால், அளவற்ற பெருங்கருணைத் திருவாளனாகிய ஒப்பற்ற அக்கடவுளின் இனிய குணாதிசய மான்மியங்களை முற்று முணர்ந்த அறிவுள்ள பெரியோர்களுக்கு எப்படியிருக்குமோ அறியேன் அந்தோ! அந்தோ!! ஆ! ஆ!! இப்படிக் கொத்த தேவதுரோகம் செய்வதழகோ.

Scanned by CamScanner

விஞ: கதிசெப்பறநூலை நாளும் எடுத்துச் சொல்லும் பிரசங்கியே! கேட்பீர். நீர் சொல்வதனுல் எனக்காச்சரியமும், என்னினும் விவேகிகட்கு உம்மீது மாச்சரியமும் உண்டா தற்கு ஏதுவாயிருக்கிறது.

எதிர் விஞ. அஃதெப்படி யுண்டாகலாம்?

எதிர் விடை. நீர் சொல்லிய ஞாயம் ஆகாசத்தில் தாமரை மலர, அதனை நேத்திரமில்லாதவன் பார்த்து மகிழ, அதனைக் காதுகளில்லாதவன் கேட்டுப் புகழ, அதைப் பறித்துக்கொண்டு வர வெண்ணங்கொண்டு கால்களில் லாதவன் ஓடியலைந்து திரிந்ததாகச் சொல்லும் ஓர் பொய்க் கதைப் போல இருக்கிறது. ஏனென்ருல், ஓர் கடவுளுண் டென்றும் அவருலகத்தை உண்டாக்கி அனேக உபகாரங் களைச் செய்திருக்கிருரென்றும், மூடர்கள் அதை மறந்து அகங்காரங்கொண்டிருக்கிருர்களென்றும், நீர் சொல் வதைப் பார்த்தால், உமக்குப் பித்தம் மேலிட்டிருக்கிற தென்று யோசிக்கிறேன்.

எதிர் விஞ. ஆனுல்; கல்வி, அறிவு, தவம், மோக்ஷம் இந்நான்கும் உமக்கில்லையா?

எதிர் விடை. அவை நான்கும் எனக்கும் உண்டுதான்.

எதிர் விஞ. ஹா! ஹா! கடவுளே யில்லையென்று நீர் ஓதியுணர்ந்த கல்வி யெப்படிப்பட்டது சொல்லும் பார்ப்போம்.

எதிர் விடை. தேவர், முனிவர், மானிடர்களைச் சிறப்பித்து அழித்து ஆக்க வல்லவராயிருந்தும், எப்படிப் பட்ட அசுர ராக்ஷச புஜபல பராக்ரம வீரசூர அகோர தீராதி தீரர்களும் தமது சரணும்புஜ அதரபான குசாதி

களுக்கு எதிர்பார்த்து ஏமாந்து திரியும்படி செய்யவல்ல அலங்கார ஸ்த்ரீயாகிற பிரம்மத்தினது ரூப ரேகா சௌந்தர்ய குணாதிசயங்களைச் சொல்லா நின்ற காம சாத்திரங்களை வாசிக்கவும் சரீரத்தைப் போஷிக்கவும் ஆடை, ஆபரணம், கந்தம், புஷ்பம், தாம்புலாதி யிடம் பொருளேவல்களை யீட்டி, யவர் முன்னீட்டி, விகாரத்தை மூட்டி, பல்லைக் காட்டி, கொஞ்சி, அடிவஞ்சி! உன்பால் தஞ்சமென்று எதிர் கெஞ்சி நிற்பதே யெனக்குக் கல்வியாம்.

எதிர் விஞ. இதுவரையிலும் செவிகொடுத்ததில் உன் கல்வியின் லக்ஷணம் தெரிய வந்தது. இனி அறிவு உண்டு என்று சொன்னதை விரித்துரைப்பாய்.

எதிர் விடை. அவ்வறிவின் பிரபாவத்தைச் சொல்லுவேன் கேட்பீர். ஊடலையடைந்த ஸ்திரீகளின் கோபக்குறிப்பையும், உணர்தலாகிய அவரெண்ணப் பொருளையும், கூடலாகிய சையோக சங்கற்பத்தையும், நோக்கி யெதிர்பார்த்திருந்து அதில் நுட்ப சமயம் அறிவால் சேல்போன்ற அம்மாதர் விழிக்கடையினால் செலுத்தும் ஊழிய பிரசாதத்தை அதிக ஜாக்கர்தையாக பக்தி விசுவாசத்தோடு செய்யுமறிவே எனக்குப் பேரறிவாம்.

எதிர் விஞ. இந்த அறிவையுடைய வுன்றனக்கே பந்தம். அந்த நரக பாதாளமும் உன்றனக்கே சொந்தம். இது மஹா தொல்லை. சந்தேகமில்லை; நல்லது. உன் அவத்தின் தவத்தைச் சொல்வாய்ப் பார்ப்போம்.

எதிர் விடை. அத்தவத்தின் பெருமையை எப்படிப் பட்டவராலும் சொல்லக்கூடாதே, நானெப்படி சொல்லப் போகிறேன்.

எதிர் வினு: பொறிமாவை மெச்சிஞன் பொக்கை வாயன் என்பது போலவும் ஆருமில்லாத இடத்தில் அசுவ மேதம் செய்வது போலவும் ஆகாது உண்மையைசுருக்கிச் சொல் பார்ப்போம்.

எதிர் விடை: அப்பெண்ணின் கிளிபோன்ற வச ஞேபதேசத்தைப் பெற்றுக்கொண்டு, பாத, கடிதட, பயோதர, ஆனன பங்கேருகங்களில் மனத்தை நிறுத்தி, கண்ணே, பெண்ணே, மானே, தேனே, மயிலே, குயிலே என்று ஸ்தோத்தரித்து வணங்கி அஞ்சலி ஹஸ்தஞக மோகித்துச் சித்திரப்ரதிமை போலக் காமாக்கி மத்தியி னின்று தகிக்கப்படுவதே தவமாகும்.

எதிர் வினு: உன்னுடைய மோக்ஷத்தினிலைமையும் எடுத்துரைப்பாய் பார்ப்போம்.

எதிர் விடை: இப்படி அகோரமான தவம் செய்யும் போது உடனே பேரருட்ப்ரவாகம் பெருக்கெடுத்து க்ஷணப் போதிற்ருனே சகியாதவளாய் அதிக விரைவில் அவள் கொடுக்கும், அதரபான, சுவர்க்காலிங்கன, தாடன, சும்பன, மதஞனந்த அனுபவ சையோக லீலாப்தியிலெழா ஞின்ற காமவின்பமே நான் கண்கண்ட மோக்ஷமாம்.

எதிர் வினு: மூடசிகாமணியாகிய நீகண்ட மோக்ஷமிது தானே?

எதிர் விடை: நான் மாத்திரம் கண்டதல்ல. மற்றெல்லாப் பிராணிகளும் அனுபவமாகக் கண்டிருந்தும் அதிலொன்றுமில்லை. யிதிலொன்றுமில்லையென்றும். ஆனல், நல்ல மனைவியோடுகூடி யில்லறத்திலிருந்து

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்ருங்கு
ஐம்புலத்தா று ஓம்பல் தலை."

என்றபடி,

கிரகாச்ரமத்தை நடத்தி யனுபவிக்கும காமசுகரசத்தை விருதாவில் விட்டுப் பின்பு மதத்தயானை தன் தலையில் தானே மண்ணை வாரிப்போட்டுக்கொள்வது போல் கடவுளுண்டென்று நம்பி அவர் மோக்ஷங்கொடுப்பாரென்று விருதா வெண்ணங்கொண்டு, காட்டிலும், மலையிலும், தவஞ் செய்வேனென்று அலைந்து கெட்டு பெண் த்ரோகம் செய்து, புறங்கொடுத்தோடும் மார்க்க விரோதிகளைக் குறித்து எங்கள் மதஞகமத்திற் சொல்லும் பிரமாணத்தைக் கேட்பீர்.

*எதிர் வினு: அந்த ப்ரமாணத்தைச் சொல்லும் அதனையும் சற்று நேரங்கேட்டுப்பார்ப்போம்.*

எதிர் விடை: பாடல்

தையலா ருடலாடத்தாம வரோடுங்கூடிச்
செய்ய தாமரையை வென்ற சீரடிச்செம்பஞ்சூட்டி
மெய்யெலாம் பாதம்சூடும் வேடத்தார் மெய்யிற்கூடா
மையன்மானிடர் பொய்மார்க்க வேடத்தில் மாய்கின்ருரே.

என்றும்,

வாசமார் குழலினுர்கண் மணியல்குற் றடத்தேமூழ்கி
நேசமார் குமுதச்செவ்வாயமுதினை நிறையவுண்டு
தேசுலா மணிமென்ருேண்மேற் சோர்ந்து வீற்றிருந்திடாதே
மாசுலா மனத்தோரெல்லா மறுமைகொண்டழிவர்மன்னே.

என்றும்,

ஊடுவதுணர் வதுற்றகல்வி மங்கையரையுள்கி
வாடுவதடியில் வீழ்ந்து வருந்துவ தருந்தவம்பின்
கூடுவதுணர் வுகெட்டுக்குணமெலாம் வேட்கைபோய்
நீடுவதின்ப முத்திவிதத்தினின்ஞர்கண் முத்தர்

என்றும்,

போகத்தை மண்ணிற்கண்டு விட்டுப்போய் விண்ணிற்கொள்ள
மோகத்தா ராகியல்லன் முயன்றுழன் மூடரெல்லாந்
தாகத்திற் றண்ணீர்கண்டு விட்டுப்போய் தண்ணீர்கேட்டு
சோகித்தே யுண்ணவெண்ணித் துயருறுவார்களந்தோ

என்றும்,

கனத்திறுமாந்துவிம்மும் கதிர்முலைத்தடத்தின்மூழ்கிப்
புனக்கொடி மாதர்செவ்வாய்ப் புத்தமுதுண்டுகூந்த
லினக்கடி மலர்பெய்காவி னின்னிழல் வதியார் வானா
வனக்கிழங்குண்டு சில்லோர் மறுமைவேட்டழிவர் மன்னே

என்றும்,

மீதுலாமிந்துகாந்த மேடைமே லமளிமீதிற்
காதலாற்கலந்துகற்ற கரணங்கள் பலவும் செய்து
மாதரார் போகங்கொள்ளார் மன்னுயிர் தமக்குத்தாமே
வேதிலாராகி யின்பமிழப்பர்புன் சமையத்தோரே

என்றும்,

ஊடியமகளிர்தம்மை யுணர்த்துவதுற்றகல்வி
நாடியங்கவரை மேனிநலிவதே யருந்தவம் போய்த்
தேடிமென் முலையிற்றேய்ந்து நினைப்பது சீவன்முத்தி
கூடியிம்மதமேற்கொண்டார் குவலயந்தன்னின் முத்தர்

என்றும், சொல்லியிருக்கின்றது.

விடைக்கு விடை: ஆ! ஹா! ஹா நன்ருக விருக்கிறது; அடா பைத்தியங்கொண்ட புத்தியுடையவனே.

முற்காலத்தில் பிரகஸ்பதிபகவான் தேவேந்திரன் தவஞ் செய்யச் செல்லுவதை யுணர்ந்து இவனைத் தடுக்கா விட்டால், அரசிலாக் குடிகளாக தேவருலகம் அழிந்து விடுமென்று கருதி சுத்தத்தை யசுத்தமென்றும் அசுத் தத்தை சுத்த மென்றும் எண்ணத்தக்கதாக நீ சொன்ன மதனுகமத்தை வஞ்சகமாய்ப் போதித்து அவனைப் போக வொட்டாது இல்லறத்தில் நிறுத்தினுர். அம்மதனுகமம் இப்படிக்கொத்த சமயத்தில் உண்டானதென்று தெரியாது இந்த சாஸ்த்ரத்தை யெடுத்துச் சொன்ன உன் புத்தி யெப்படிக்கொத்ததென்ருல், ஒரு கதை சுருக்கமாகச் சொல்வேன் கேட்பாயாக.

மைத்துனன் முறையுடைய இரண்டு மூடர்கள் ஒரு தேவாலயத்தில் தீபாராதனை சமயத்தில் சென்று சன்னி தானத்திலிருக்கிற சங்கீத வாத்தியக்காரர் வாசிக்கும் மத்தளத்தைக்குறித்து; மைத்துனு? இதிலொருவனிருந்துக் கொண்டுதான் "தனு தனு" வென்று சத்திக்கின்ருன் இவனை வெளியிலிழுத்துப் பார்ப்போம் நீ யந்தப்பக்கத்தில் துளை செய்து கையைப்போடு நானிந்தப் பக்கத்தில் கையைப்போடுகிறேன் என்றிருவரும் பேசிக்கொண்டு பின் சில நாழிகை பொறுத்து மத்தளக்காரனில்லாத சமயத்தில் அம் மத்தளத்தை மாட்டித்தொங்கவிட்டிருக்கும் மண்டபத் திற்சென்று முன் பேசிக்கொண்டபடியே மத்தளத்தைக் கிழித்து கையை நுழைய விட்டு ஒருவரை யொருவர் பிடித்துக்கொண்டு ஆளகப்பட்டான் விடாதே விடாதே யென்று ஆரவாரமிடும் தருணத்தில் அந்தக் கோயில் அதிகாரம் செய்யும் மணியக்காரன் கண்டு இவர்களை அம்மண்டபத்துத் தூணேடு தூணுய் கயிறுகளால் வரிந்து அடியடியென்று கோல் கொண்டு புடைத்து கையிலிருந்த

பத்து வராகனேயும் பறித்துக்கொண்டு, அவ்விடத்திலினி யென்றும் எட்டிப்பாராதிருக்கும்படி நெடுந்தூரந்துரத்தி விட்டான். அப்போது அம்மூடர் மைத்துனு அடிபட்டதும் கையிலிருந்த பத்து வராகன் போனதும் பெரிய காரிய மாகத் தோன்றவில்லே. இன்று தினம் பாதி சந்தேகம் நிவர்த்தியாச்சுதே அதுவே நமக்குப் போது மென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு சந்தோஷத்துடன் போனுர்களாம்.

அம் மத்தளத்தின் தன்மையை யின்னதென்றறி யாமல் கிழித்து அடியுதை பட்ட காலத்தும் சந்தோஷப் பட்ட மூடர்கள் போல அம்மதனுகமத்திற் கூறிய கருத்தை யின்னதென்றுணராத இப்படிக்கொத்த புல்லறிவையுடைய நீ அடைந்திருக்கும் அற்ப காமத்திற்கும், அதற்கிலக் காகிய மாதர்கட்கும் அவராற்கொடுக்கும் சிற்றின் பத்துக்கும் யான் குற்றம் கூறவேண்டுமாயின் மிகவிரியும் ஆயினும் சில ப்ரமாணங்கள் மேற்கோள்களாக எடுத்துக் கூறுகிறேம் கேட்பாயாக

பாடல்

காமமே குலத்தினேயும் நலத்தினேயும் கெடுக்கவந்த களங்கம்
காமமே தரித்திரங்கள னைத்தினேயும் புகட்டிவைக்கும் கடாரம்
காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்குங் கபாட்ம்
காமமே யனேவரையும் பகையாக்கிக் கழுத்தரியும் கத்திதானே,

என்று நீதி சிந்தாமணியினும்.

சிக்குமிகவே நாறுகின்றகுழன் முகிலென்பர்
திரளூத்தை மாருதவாய்
செம்பவள மென்பர் சளிகொண்டு நீர்மாருத
சிறுநாசி குமிழ தென்பர்

பக்குவமதன்றி விழுகின்ற முலையானதோற்
பையை மகமேரு வென்பார்
பாராது நரகத்து வாரமாங்குழிதனை
பாரின்ப வாரியென் பார்,
மிக்குவரிரத்தமும் சீயும்எலும்பும் போர்த்த
மேனிமலர் மாலை யென்பார்
மேலான நரகந்தரும் சிறியவின்பமதை
மேலின்ப வீடென் பரிம்
மைக்கருங் கடலிலெனை வீழாமலரு ளுவாய்

என்று, வெண்மணி நராராயண பாரதியாரும்

குடருங் கொழுவுங் குருதியு மென்பும்
தொடருநரம் பொடுதோலும்—இடையிடையே
வைத்ததடியும் வழும்பு மாமற்றிவற்றுள்
எத்திறத்தாளீர்ங் கோதையாள்,

என்று, நாலடியினும்,

தோலிரத்த மிறைச்சிமேதை யெலும்பு மச்சைசுவேதநீ
ராலெடுத்த முடைக்குரம்பை யழுக்கினோடு புழுக்குழா
நூலொழுக்கொடு கோழையீர னுரைகரு மூத்திரபாத்திரஞ்
சேலடர்த்த கணார்களென்பது தோமலர்த்திர டிண்ணமே,

என்றும்

ஆசையுற்றுழல் சூகரங்கள சுத்தமேவி யளைந்துதின்
றேசுகித்தன வாயிடுஞ்சுக மேழையோடுறு மின்பநீ
மாசதற்றெளிர் நித்தசுத்த வளந்தருஞ் சுகவாரிகாண்
ஈசனுக்கடி மைத்திறத்தி லிசைந்து பார்பெறுமின்பமே,

என்று, சிவஞான சித்தியாரினும்,

காமமேகொலைகட் கெல்லாம்காரணம் கண்ணோடாத
காமமேகளவுக் கெலலாம் காரணம் கூற்றுமஞ்சும்

காமமேகள் ளுண்டற்கும் காரணம் ஆதலாலே
காமமேநரகபூமி காணியாக் கொடுப்ப தென்றுன்,

என்று, திருவிளையாடலிலும்,

மேவுதற்கரிதாய்க்கேசம் புகையதாய் விழியாற்றீக்கும்
தீவினைச்சிகை சேர்மாதர் எனுங்கனற்றிரணம்போல
யாவரைச்சுடாது தூரத்தெரிகின்ற நரகத்தீக்குப்
பாவையர்குளிர்ந்த மேனிபகையிலா விரகதாமே,

என்றும்,

மாமடம்செறிந்த நெஞ்சின் மனிதராம்புட்பிடிக்கும்
காமனும்வேடன் வீசும்வலையொப்பார் கருங்கண்மாதர்
தீமனச்சேருர் சன்மச்சிறுகுழி மீனுமாந்தர்க்
கேமவாதனைக் கயிற்றுத்தூண்டிலுக் கிரையுமொப்பார்.

என்று, ஞானவாசிட்டத்திலும்,

நாசியூரல் கோழையெச்சினுறு மாமுகத்தையே
மாசுருதபூர்ணசந்த்ர வட்டமென்பர் ஒட்டுவைத்
தேசுருநரம்பினைக் கொடென்புகட்ட மைத்ததோ
வீசவீச நெஞ்சழிந்து வேணுமென்பர் காணுமே.

என்றும்

எழுகுறும்பி பெருகுகாதை வள்ளையென் பரிகழ்தரும்
புழுவடர்ந்த குழலிருண்ட புயலதென்பர் பூளைநீ
ரொழுகுகண்கள் குவளையென்பர் தரளமென்பருயிரொடும்
பழுதுறும்பல் லென்பையின்ன பகர்வதென்ன பாவமே,

என்று பிரபோத சந்த்ரோதயத்திலும்,

என்னைக்கண்டுநீ மாதரார்வடிவ மீதிச்சைவைத்து ழல்கின்றுய்
பொன்னையுந்து கிலையும்பிரித்திடின் வெறும்புழுமலக் கூடல்லாற்
பின்னையுண்டு கொல்கண்டு நீமயங்குதல்பிராந்தி சங்கரன்பாதத்
தன்னைநாடுதி நெஞ்சமேபரசு கோததியுறப் பெறலாமே,

என்று வைராக்கிய சதகத்தினும்.

இப்படி இன்னுமனேக சாஸ்த்திரங்களிலும் சொல்லி யிருப்பதால் இச்சிற்றின்பத்தையே ஓர் பொருளாகக் கொள்ளாதிருப்பாயாக.

வினு: ஆனாலிதைப் பார்க்கினும் மேலாக நீர் கண்ட பொருள்யாது?

விடை: அழிவிலாத பேரின்பத்தைக் கொடுக்குமோர் கடவுளுண்டென்று உணர்வதேயாம்.

வினு: அக்கடவுளைக் கண்டவர்யார்.

எதிர் வினு: ஆனாலிப் பிரபஞ்சத்தைப் படைத்தவோர் கடவுளிருக்கிறதாக உனக்கொப்பில்லையா.

எதிர் விடை: எனக்கில்லவே யில்லை.

எதிர் வினு: அப்படியானால் இவ்வுலக உற்பத்திக்குக் காரணம் யார்.

எதிர் விடை: சையோகத்தால் உண்டு பண்ணும் மாதா பிதாக்களே காரணமாம்.

எதிர் விடைக்கு விடை: மாதா பிதாக்கள் காரண மென்னில் அவர் வேண்டின காலத்து புத்திரர் உண்டாகா மலும் வேண்டாத காலத்து உண்டாதலும், ஆணை யிச்சிக்கப் பெண்ணும், பெண்மகவை யிச்சிகக ஆண் மகவும் அலியுங் குரூபியுமாகி அவர்களிச்சையன்றி உண்டாகுதலும் அல்லாமலும் தன் கருப்பத்திலிருக்கிற சிசுவை இன்னதென்று உணரப்படாமையாலும், அந்த சிசுவை தானுக வருவித்துக் கொள்ளக்கூடாமையாலும், அவரைக் காரணமாகச் சொல்லக்கூடாது.

எதிர் விடை: அவராற் கூடாதெனருல் அவருடைய சுக்கில சுரோணிதங்களைக் காரணமாகக் கொண்டு சரீரங்கள் உற்பத்தியாகிறதுகள்.

எதிர் வினு: அஃதெப்படியுண்டாம்.

எதிர் விடை: மரங்கள் செடிகள் அதனதன் பீஜங்களைக்கொண்டு எப்படி உண்டாகிறதுகளோ அப்படியே, மனிதர் வயிற்றில் மனிதரும், மாட்டின் வயிற்றில் மாடும், பக்ஷிகள் வயிற்றில் பக்ஷிகளும் உண்டாகிறதுகள்.

எதிர் வினு: நல்லது அந்த சுக்கில பீஜங்களை காரணமென்பதற்கு திஷ்டாந்தரமுண்டோ.

எதிர் விடை: உண்டு

எதிர் வினு: அதெப்படி.

எதிர் விடை: சுரை விதை நட்டால் அவரை முளைக்குமா? அவரை நட்டால் சுரை முளைக்குமா? வாழையடிவாழையாய் முருங்கையின்கண் முருங்கையாய் வருதல் போல் இப்பிரபஞ்சம் உண்டாதலை யுணராது ஒரு கடவுளால் உண்டாகிறதென்று எப்படிச் சொல்லமுடியும்?

எதிர் வினு: அப்படியாருல் அந்தந்த பீஜங்களின் குணமெப்படியோ அப்படியன்றோ உற்பத்தியு மிருக்க வேண்டுவது அவ்வாறன்றி மிகவும் பேதமடைந்திருப்பதேன்.

வினு: அதிலென்ன பேதமிருக்கிறது.

விடை: நுண்ணிய அறிவில்லாத குறைவால் எப்படி தெய்வமில்லையென்று எண்ணினையோ அப்படிதான் இதிலும் பேதமில்லையென்று பிதற்றுகிருய்.

விஞ: இருக்கட்டும் உம்முடைய நுண்ணறிவாற் கண்ட பேதத்தைச் சொல்லும் பார்ப்போம்.

விடை: மனிதரிடத்துப் புழுவும், பாம்பின் வாயிற் கல்லும், கல்லின் வாயில் தேரையும், மரங்களில் கிருமி புல்லுருவி காளானும், ஈயின் வயிற்றில் புழுவும், புழுகுளவி யாதலும், இப்படி அனேக பேத மடைவதன்றியும், சுவேத மென்னும் வேர்வை நீரில் தோன்றுகின்ற ஜெந்துக்களுக்கு பீஜமில்லாதிருத்தலாலும் விதை காரணமென்றது எவ் வளவும் ஞாயமன்று.

எதிர் விடை: அங்ஙன மன்று

எதிர் விஞ: மற்றெங்ஙனம்.

எதிர் விடை: நால்வகை யோனிகளில் ஜெனிக் கின்றவுயிர்கள் பேதமடைதற்குக் காரணம் யாதென்றால், பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் பூதங்கள் நான்கி னுடைய கூட்டுறவின் பேதத்தால் உண்டாகிற சரீரங்களே யொழிய ஒரு கடவுளால் வருவதன்று.

எதிர் விஞ: அப்பூதம் நான்கும் கூடிச் சரீரங்கள் தோற்றுவிப்பதை யிப்போதொருவரும் கண்டதில்லையே.

எதிர் விடை: இப்போதொருவருங் காணவிடினும் ஆதியிற்றேகங்களில்லாதபோது பூதங்கள் கூடியுண்டாக்கி விட்டதாதலால் அவ்வித்துகட்குப் பூதங்களே காரணமாம்.

எதிர் விஞ: அந்த பூதங்கள் உண்டாதலுக்கு யார் காரணம்.

**எதிர் விடை:** அவை யொருவனு லுண்டாக்கப்பட்டனவல்ல.

*எதிர் வினு:* பின் எவ்வாறுண்டாயின.

**எதிர் விடை:** வேம்புக்குக் கசப்புண்டான காரணத்தைச் சொன்னுல் பூதோற்பத்திக்கு நான் காரணம் சொல்லுகிறேன்.

**விடைக்கு விடை:** வேம்புக்குக் கசப்பு எப்போதுமிருக்கிறது தான்.

**எதிர் விடை:** அதுபோலப் பூதசதுஷ்டயமும் எப்போது முள்ளதுதான்.

*எதிர் வினு:* ஆனுல் அப்பூதங்கள் கூடிச்சரீரங்களெடுத்தால் அதிலொரு சீவனுண்டாகுமா.

**எதிர் விடை:** உண்டாகுமே.

*எதிர் வினு:* அஃதெப்படி.

**எதிர் விடை:** வெற்றிலே, பாக்கு, சுண்ணும்பு, இம்மூன்றுங் கூடினுல் இல்லாத சிவப்பு நிற மெப்படியுண்டாகுமோ அது போல நான்கு பூதங்களும் கூடிய விகாரத்தால் ஓர் சீவனுண்டாகும்.

*எதிர் வினு:* ஆ-ஹா-ஹா-சரி-சரி, அங்குந்தப்பியிங்குந் தப்பி யகப்பட்டுக் கொண்டான் தும்மட்டி மட்டன் என்றது போல அகப்பட்டுக் கொண்டாய் நல்லது அதையின்னமொருதரம் சொல்லு அந்தப் பாக்கு முதலிய மூன்றையும் ஒரு புருஷன் ஒன்ருகக் கூட்டச் சிவப்புண்டாயிற்ரு அப்பாக்கு முதலானவை தனக்குத்தானே சிவப்பு நிற மடைந்ததா.

எதிர் விடை: நீர் சொல்லியபடி யொருவன் சேர்க்கத்தான் சிவப்புண்டாயிற்று.

எதிர் வினு: அவைதாமே கூடிச் செந்நிறமுண்டாக லாகாதா.

எதிர் விடை: தாமே கூடுதற்குச் சக்தியில்லாத ஜடபதார்த்தங்களாதலால் ஒரு புருஷனுற் சேர்க்கப்பட்டு தான் செந்நிறம் தோன்றவேண்டும்.

எதிர் வினு: இப்படியிருக்கப் பூதங்களின் சேர்க்கையால் சரீரங்கள் தோன்றுமென்று எந்த அறிவாற் பிதற்றினுய்.

எதிர் விடை: யானிதுவரையிலும் சொன்னதெல்லாம் அறிவின்மைதான்.

எதிர் வினு: ஆதலால் அவித்தியாப் பிரகிருதியினின் றழுந்திக்கிடக்கின்ற சீவர்கள் தனது திருவடியைச் சேவைப் பெற்று ஆனந்தத்தழுந்தி யிருப்பார்களே யென்று, பூ பூதராதி யறிவைக்கொடுத்த தெய்வத்துக்கு துரோகஞ் செய்வதழகோ.

எதிர் விடை: அழகல்லதான். ஆனபோதிலும் நீர் இவ்வளவு பிரயாசைப்பட்டுச் சொல்லிய பின்பும், இந்த பூத சதுஷ்டயங்களைக்கொண்டு தனுகரண புவனபோகங்களைக் கொடுத்த கர்த்தா வொருவன் உண்டென்று கொஞ்சந் தெரிந்ததானுலும் நன்ருகப் புலப்படும்படி யென்கண்முன்னே காட்டினுற்றுன் ஒப்புக்கொள்வேன். அல்லாவிட்டால், சப்பைக்குதிரைக்கு சறுக்கினது சாக்கு யென்று படுத்துக்கொள்வேன்.

எதிர் விஞ: பாடல்.

அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே வுலகு.

என்ற திருக்குறட்போலும்.

ஒருவனே டொருத்தி யொன்றென்றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறைவந்துநின்று போவது மாதலாலே
தருபவனொருவன் வேண்டும்தான் முதலீறுமாகி
மருவிடுமனுதி முத்தசித்துரு மன்னிநின்றே,

என்ற சிவஞான சித்தியார் பாடல் போலும்.

நிருமலபூரண நித்தாதி நீங்கா
வொருபரந்தா னுளதுந்தீபற,
வுலகங்கள் தோற்றலாலுந்தீபற,

என்று அவிரோத உந்தியார் பாடல் போலும்.

அனுமான ரூபங்களாக எடுத்துக்கூறில் ஒப்புக்கொள்ள மாட்டாயோ.

எதிர் விடை: கண்ணுற் பாராததை யெப்படி ஒபபுக் கொள்ளலாம்.

எதிர் விஞ: பிரத்தியக்ஷமாக நெருப்பைக் காணுமல் புகையைக் கண்டபோது அங்கு நெருப்புண்டாவென்று உன்னை ஒருவன் விஞவினுல் உண்டென்று சொல்வையா? இல்லை யென்று சொல்லுவையா.

எதிர் விடை: புகையிருக்குமிடத்து நெருப்பிருக்கும் என்றதற்கு முன்னங்கண்டிருப்பதால் சத்தியமாக அனுபவ அனுமானத்தால் உண்டென்றே சொல்லுவேன். அது போலக் கடவுளை யான் பாராதிருக்க எப்படி உண்டென்று ஒப்புக்கொள்ளலாம்.

எதிர் விஞ: அஃதிருக்கட்டும் உன் பாட்டனை நீ முன்னம் அறியாதிருக்க, ஒருவனுக்கு பாட்டனுண்டா வென்று விஞவிஞல், நீ அதற்கு என்ன சொல்லுவாய்.

எதிர் விடை: உண்டென்றே சொல்லுவேன்.

எதிர் விஞ: கண்ணுற் பாராத பாட்டனை உண்டென்று நீ எப்படி சொல்லலாம்.

எதிர் விடை: என் தகப்பனிடமாக யான் பிறந்தது போல அவனையும் பெற்றவனொருவன் இருப்பானென்று ஒப்புக்கொண்டு உண்டென்றே சொல்லுவேன்.

எதிர் விஞ: நல்லது நீ கண்டது ப்ரத்யக்ஷ ப்ரமாணமா அனுமான ப்ரமாணமா.

எதிர் விடை: அனுமானப்ரமாணம், ப்ரத்யக்ஷப்ர மாணத்துக்கு ஒத்திருப்பதால் கடவுளுண்டு போலத்தான் தோன்றுகின்றது.

விடைக்கு விடை: அதுபோல் அவன் தந்தை அவன் தந்தை அவன் தந்தை பார்க்கும் போது சிருஷ்டி யாரம்பத்திலிருந்து ஒரு தந்தையைத் தந்த காரணகர்த்தா ஒருவனுண்டென்று சத்தியமாக நீ நம்புவாயாக.

விஞ: ஆஞல் அக்கடவுள் நமக்குச் செய்திருக்கும் உபகாரங்களைச் சொல்லும் பார்ப்போம்.

விடை: பை, முட்டை, நிலம், வியர்வை என்னும் நால்வகை யோனிகளின், வழித்தாய் தேவபேதம் 14லக்ஷம், மானிடபேதம் 9 லக்ஷம், விலங்கின்பேதம் 10 லக்ஷம், பறவைபேதம் 10 லக்ஷம், ஊர்வனபேதம் 11 லக்ஷம், நீர்

வாழ்வனபேதம் 10 லக்ஷம், ஸ்தாவரபேதம் 20 லக்ஷம் ஆகிய எண்பத்து நான்கு நூருயிரம் முகபேதமுள்ள எழுவகைத் தோற்றமுடைய சீவராசிகள், வாழுதற்கிட மாகிய அண்டாண்ட புவனங்களுண் மிகவும் கிடைத்தற் கரிய ஜம்புத்தீவினுள் பரதகண்டத்துள் அடங்கிய இந்து தேசத்தில், அழகும், சிறப்பும், ஆண்மையும், வீரமும், புகழும், பெருமையும், புண்ணிய நெறியும், சத்தியமும், சௌசமும், தானமும், தருமமும், மெய்த்தவக்குணமும், மேன்மையும், பக்தியும், தந்தை தாய்க்குகந்த தகுந்த நடையும், அறிவும், சிறப்பும், அதிகுணக்குறிப்பும், பொறுமையும், திறமையும், பூததயையும், கர்த்தனேப் பூசிக்கும் வித்தகப்பக்தியும், இத்தனே யெழிலுடைய இவ் வுலகின்கண் பஞ்சீக்ருத மஹாபூதம் 5, தன்மாத்திரை 5, ஞானேந்த்ரியம் 5, கருமேந்த்ரியம் 5, கரணம் 4, நாடி 10, அவத்தை 5, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாரம் 6, மலம் 3, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயில் 9, ஆகிய 96 தத்துவங்களோடும், நன்மை தீமையைப் பகுத்தறியும் மாக்ஷிமை பெற்ற அறிவையுடைய இம்மானிடத் தேகத்தை நமக்களித்த பரம ரக்ஷகராகிய தயாநிதியானவர் ஐயோ! இச்சீவர் கட்குப் போக பாக்கியங்கள் வேண்டுமே என்று தமது திருவுளத்து எண்ணிச் சகலவுணவுகளேயும் கொடுக்க வல்லவர் மேகங்களேப் படைத்தார்.

விஞ: நல்லது இத் தேகத்துள்ள 96 என்னும் தொகை பிணேயுடைய தத்துவங்களின் வகையைக் கேட்க விருப்ப மிருப்பதால் பஞ்சீக்ருத மஹாபூதம் ஐந்தாவதெவை.

விடை: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் இவ்வைந்துமே.

வினு: தன்மாத்திரைகளைந்தாவ தெவை:

விடை: சப்தம், பரிசம், உருபம், இரசம், கந்தம் இவ்வைந்துமே

வினு: ஞானேந்திரியங்களைந்தாவ தெவை.

விடை: சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை கிராணம் இவ்வைந்துமே.

வினு: கருமேந்திரியங்களைந்தாவ தெவை.

விடை: வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் இவ்வைந்துமே.

வினு: கரணங்கள் நான்காவ தெவை.

விடை: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இந் நான்குமே.

வினு: நாடிகள் பத்தாவ தெவை.

விடை: இடை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்தி சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி இப்பத்துமே.

வினு: அவத்தை ஐந்தாவ தெவை.

விடை: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் இவ்வைந்துமே.

வினு: மல மூன்ருவ தெவை

விடை: ஆணவம், காமியம், மாயை இம்மூன்றுமே.

விஞ: குணம் மூன்ருவ தெவை.

விடை: சத்துவம், ரஜஸ், தமசு, இம்மூன்றுமே.

விஞ: மண்டலம் மூன்ருவ தெவை.

விடை: அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் இம்மூன்றுமே.

விஞ: பீணி மூன்ருவ தெவை.

விடை: வாதம், பித்தம், சைத்தியம் இம்மூன்றுமே.

விஞ: விகாரம் எட்டாவ தெவை.

விடை: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பை, அசூகை இவ்வெட்டுமே.

விஞ: ஆதாரம் ஆருவ தெவை.

விடை: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அஞகதம், விசுத்தி, ஆக்ஞை இவ்வாறுமே.

விஞ: தாது ஏழாவ தெது.

விடை: இரதம், உதிரம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல் இவ்வேழுமே.

விஞ: வாயு பத்தாவ தெது

விடை: பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் இப்பத்துமே.

விஞ: கோசம் ஐந்தாவதெது.

விடை: அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் இவ்வைந்துமே.

விஞ: வாயில் ஒன்பதாவதெது.

விடை: கண், 2. காது, 2. மூக்கு, 2. வாய், 1. குதம், 1. குய்யம், 1. இவ்வொன்பதுமே.

விஞ: நீர் முன் கூறிய மேகங்களில்லாவிட்டால், எல்லா நன்மைகளும் குன்றுமோ.

விடை: குன்றுதோ.

விஞ: அஃதெப்படி.

விடை: பாடல்.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை,

என்றும்,

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றுங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை,

என்றும்,

விசும்பிற்றுளி வீழினல்லான் மற்றுங்கே
பசும்புற்றலை காண்பரிது,

என்றும்,

திருவள்ளுவ நாயனுர் முதலிய அநேகம் பெரியோர்கள் சொல்லியிருப்பதன்றி, இப்போது மிவ்வுலகத்தில் அநு

வத்தாலும் கண்டுணரலாம். இவையன்றி யின்னுமவர் செய்திருக்கும் உபகாரங்கள் என்னவென்றுல் இது முதல் அறுவகைப்பருவமும் பிசகாது நடத்தியும் சந்திர சூரிய நக்ஷத்திராதிகளைப் பிழையின்றி செலுத்தியும், இப்பூமியை அசையாது நிறுத்தியும், ஆகாயத்திடி, மழை, மின்னலாதிகளை தனக்குரிய நெறிகடவாது இருத்தியும், சண்டப்பிரசண்டமான வாயுவை நிதானத்தடக்கி விடுத்தும். தலைக்கு மேலாகிய கடலை அணைகடவாது அடக்கியும், பர்வதங்களை அசையாது நிறுத்தியும், பூத, பிசாசு, ராக்ஷசர்களை மீருது அச்சமுறுத்தியும், இப்படி அனேக இடையூறுகளை வரவொட்டாது கண்ணுக்கு இமைபோலும், உடற்கு உயிர்போலும், கன்றுக்கு பசுவை போலும், மிகவும் பரிவாகக் காத்து ரக்ஷிக்கானின்ற பெருங்கருணைக் கடலின் தன்மையைப்பார். கல்லுக்குட் தேரைக்கும், கருவிற்குட் சிசுவிற்கும், முட்டைக்குட் பறவைக்கும் இப்படி அனேக விதத்தில் யாதோருதவியுமின்றி யனுதியாகிய உயிர்கட்கோரிடையூறு மின்றி நடத்துகின்ற சர்வசாமர்த்திய சத்யத்வ சாந்தகுணம்பர சம்ப்ரதாய ப்ரபுவுக்கு நாமோருதவியும் செய்யாதிருப்பது என்னவனியாயம்.

*விஞ: நீர் கூறியபடி நம்மையும் எல்லாப் பொருள்களையும், படைத்து அளித்து அழிக்கவல்ல கடவுளுக்கு நாம் எப்பொருளைக் கொண்டு உதவி செய்கிறது.*

விடை: அன்புடன் நன்றியறிந்த ஆராமையுற்ற மனத்தால் இடைவிடாது நினைந்துருகித் தோத்தரித்து வணங்கி அவரது திருவடிச் சேவைக்கு அவாவுறுதலே அவர்க்குச் செய்யும் உதவியென்றும் அனேக வேதாகம சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. அப்படியே யுதாரணமுங் கூறுகின்ரேம்.

## பாடல்

எல்லாமளித்த பரன்றனக்கே எம்மாலியற்று
முதவியென்னவ்
வல்லான் கருணைப் பெருக்கமதை மனத்திற்பதித்து
துதித்தெழுந்து
அல்லாற்பகலு மிப்படியே அண்ணல் திருத்தாட்கு
அன்புவைத்து
பொல்லாமாயைப் பொறுத்திதனை புரிகை
கைம்மா றெனுமறைகள்

என்று ஓர் உத்தமப்பாவினும்,

அழுதுவாண்முறுவல் அரும்பியும் களித்தும்
ஆடியும் பாடியும் மகிழ்ந்தும்
தொழுதுமாதரித்தும் விழுந்து மேலெழுந்தும்
துதித்திடத் தன்பதந்தருவான்
முழுதுமாயோங்கு முச்சுடராகி மூலமாய் ஞாலமாய்
விண்ணுய்
எழுதொணு மறைக்கு எட்டொணுவடிவத்து
எம்பிரான் உம்பர்நாயகனே

என்று பாரதத்தினும்,

அறந்தனைநிறுத்தி வேதமருள்சுரந்து அமைந்தநீதி
திறந்தெரிந்துலகம் பேணச்செந்நெறிச் செலுத்தித் தீயோர்
இறந்துகநூறித்தக் கோர்இடர்துடைத்து ஏகவெண்ணிப்
பிறந்தனன்றன் பொற்பாதமேத்துவார் பிறப்பறுப்பான்

என்று கம்பராமாயணத்திலும்,

தனக்குவமை யில்லாதான்தாள் சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலை மாற்றலரிது

என்றும்,

வேண்டுதல் வேண்டாமை யிலானடிசேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பையில

என்றும்,

அறவாழியந்தணன்ருள் சேர்ந்தார்க்கல்லாற்
பிறவாழி நீந்தலரிது

என்று திருவள்ளுவர் திருக்குறளிலும் இன்னுமனேக சாஸ்த்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

வினு: அந்த சாஸ்திரங்களை யெல்லாம் எப்படி நம்பலாமையா.

எதிர் வினு: நம்பலாகாதென்றதுயாது காரணம்.

எதிர் விடை: ஆனுற் சருக்கரை என்று ஏட்டில் எழுதி நக்கிப்பார் அதுவுந் தித்திக்கு மென்று ஒருவன் சொன்னுல் புத்தி புத்தி பொய்யல்ல மெய்யென்னல் வேண்டும் போலிருக்கின்றதே.

எதிர் வினு: ஏன் அதிலுனக்கென்ன சந்தேகம்.

வினு: முற்காலத்து வயிறு வளர்க்கும் பொருட்டுப் பொய்யைப் பெருக்கிப் புராணஞ்செய்து சதியைப் பெருக்கி சாத்திரஞ்செய்து பொய்ப் பொருள் பேசிக் கைப்பொருள் வாங்கித் தின்று கொழுத்து வேலையில்லாமல் ஓலையில் எழுதி வைத்த சாத்திரங்களை மெய்யென்பதற்கொரு சாட்சியைக் காட்டும் பார்ப்போம்.

விடை: அப்படியே முன்ஞேர் தீட்டினதைக் காட்டுவேன் பார்.

வினு: அப்படியே உதாரணம். பாடல்.

சோதிடம் பொய்யாது மெய்யென்ப தறிவரிய
சூழ் கிராணமே சாட்சியாம்
சொற்பெரிய வாகடம் நிசமென்கை பேதிதரு
தூய மாத்திரை சாட்சியாம்
ஆதியிற் செய்ததவம் உண்டில்லை யென்பதற்கு
ஆளடிமையே சாட்சியாம்
அரிதேவதேவ னென்பதை யறியமுதனூல்
அரிச்சுவடியே சாட்சியாம்
நாதனேமாதவ னென்பதற் கோர்ருத்ர
நமக சமகஞ் சாட்சியாம்.

என்றபடி அனேகஞ்சாட்சிகளுண்டாய் விளங்கா நின்ற நேத்திரம் போன்றவை சாத்திரமென்றுணர்வாயாக.

*வினு: நல்லது, அப்படிக் கொத்த கடவுளின் இனிய தயாபாத்ரவுைவதெப்படியையா.*

**விடை:** அதை யு சாவி யறியுமிடத்து ஓர் ஒப்பற்ற வாக்கியங்கிடைத்திருக்கிறது.

*வினு: அப்படிக்கொத்த வாக்கியம் யாவராற்சொல்லப் பட்டது.*

**விடை:** பூர்வத்திலனேக மானிடர் அளவிலாத தீமைகள் செய்து அகோரமாகிய கெட்ட நரகிற்பட்டு உழன்று உற்பவிப்பதைக்கண்ட எமதையனுகிய தற்பரானந்தனது ஆஞ்ஞையில் உரந்து பரந்து இறங் திலங்கிய சத்திய லோகத்து உத்தமியாகிய சரஸ்வதிதேவி செவ்வையாகிய ஔவையென்னும் மானிடத்திருஉருக் கொண்டு உற்பவித்து அனேக மகிமைகளை உடையவளா யிருந்து அனேக நீதிநூல்களைச் செய்தளித்தனர்.

அவற்றுள் ஆத்திச்சூடி யென்ரெரு ஒப்பற்ற சாத்திரத்தி லுள்ள சிலாக்கிய வாக்கியத்தை நோக்குமிடத்து அஃ தொன்றுமே அஞ்ஞானத்தை நீக்கி மெஞ்ஞானததை நோக்கி ஏக்க முழுதும் போக்கி ஆக்கமிக வுண்டாக்கி மோக்கந்தன்னிற் சேர்க்குமென்னும் ஊக்கங் கொள்வாயாக.

வினு: அப்படிக்கொத்த வாக்கியம் யாது?

விடை: "அறஞ்செய விரும்பு" என்றதாம்.

வினு: நீர் சொல்லிய இவ்வாக்கிய மொன்றுமே நித்திய சத்திய முத்தி கொடுப்பதறிவோம் இதனுரையைச் சொல்லும்.

விடை: அறம்—தர்மத்தை, செய்—செய்தற்கு, விரும்பு—நீ ஆசைகொள் என்பதாம்.

வினு: இஃது எத்தனைப்பதங்கள் சேர்ந்தவாக்கியம்.

விடை: மூன்று பதங்கள் சேர்ந்த வோர் வாக்கியம்.

வினு: பதம் என்பது யாது?

விடை: ஓர் மொழியாம்.

வினு: அம்மொழிக்குக் காரணம் யாது.

விடை: எழுத்துக்களாம்.

வினு: அவ்வெழுத்துக்குக்காரணம் யாது.

விடை: ஒலியாம்.

வினு: அவ்வொலிக்குக் காரணம் யாது.

விடை: சீவாந்தக்கரண சம்பந்தப்படி யுந்தியுணின்று உதானவாயுவானது, கண்டம், உசசி, மூக்கு, நா, பல்,

அணம் இவற்றின் முயற்சியைக் கொண்டு ஓசையோடு எழுத்தைப் பிறப்பிக்கும்.

வினு: இதற்கு உதாரணம் யாது.

நிறையுயிர் முயற்சியினுள்வளிதுரப்ப
எழுமணுத்திரங்கணடம் உச்சி
மூக்குற்றிசழ்நாப் பலலணதொழிலின்
வெவ்வேறெழுத்தொலியாய்வரல பிறப்பே

என்று பவணந்திமுனிவர் நன்னூலிற் சொல்லியிருக்கின்றார்.

வினு: இவ்வெழுத்துக்கள் எத்தனை வகை.

விடை: முதல் சார்பு என இரு வகையாம்.

வினு: முதலெழுத்துக்கள் என்பவை யாவை.

விடை: அகர முதல ஔகாரமீராகக் குறில் நெடில் விஞவென மூன்று வகையாய் வழங்கும் பன்னிரண்டுயிர்களும் ககரம் முதல் னகர மீறக வல்லினம் மெல்லினம் இடையினம் என மூன்று வகையாய் வழங்கும் பதினெட்டு மெய்களும் ஆகிய முப்பதும் முதலெழுத்துக்களாம்.

வினு: சார்பெழுத்துக்கள் எத்தனை வகை.

விடை: உயிர்மெய்யென்றும் ஆய்தமென்றும் இருவகை.

வினு: அவ்விருவகை யாது.

விடை: பன்னிரண்டுயிரும் பதினெட்டு மெய்யின் மேலேற இருநூற்றுப்பதினாறாகிய உயிர்மெய்யெழுத்துக்

களும், குற்றெழுத்துக்குப் பின்னும் உயிர்மெய் வல்லெழுத்திறகு மேலும் வருகிற முப்புள்ளி வடிவமாகிய ஆயத மொன்றும் ஆகிய இருநூறறு பதினேழும் சார்பெழுத்துக்கள் என்று சொல்லப்படும்.

வினு: இவ்வெழுத்துகட்குப் பிறப்பிடம் எங்கே.

விடை: உயிரெழுத்துக்கும் இடையினத்துக்கும் கண்டததிலும் வல்லினததிறகு மார்பிலும் மெலலினத்திற்கு நாசியிலும் பிறபபாம.

வினு: இதற்குதராணம் யாது.

விடை: அவ்வழி ஆவி யிடைமை
யிடமிடறுமம மேவமென்மை
மூக்குரம பெறும்வன்மை.

என்று நன்னூலிற் சொல்லியிருக்கிறது.

வினு: ஆக எழுத்துக்கள் எத்தனை.

விடை: உயிர், 12. மெய், 18. உயிர்மெய், 216. ஆய்தம், 1 ஆக எழுததுககள் 247.

வினு: இவ்வெழுத்துக்கள் மாத்திரை எவ்வாறு பெறும்.

விடை: குறில், 1. நெடில், 2. ஒற்றும் ஆய்தமும் ½ மாத்திரைகளும் பெறும. இவ்விலக்கணங்களோடு கூடிய இவ்வெழுத்துக்களாலாயதே பதமாதலால் ''அறஞ் செய விரும்பு'' என்னும் முப்பதத்திற்கும, அதர்மம் நீங்கிய தருமம செய் என்று பொருளாம.

வினு: அதர்மம் நீங்கிய தருமம் யாது.

விடை: முப்பத்திரண்டு அறங்களாம்.

வினு: அஃதியாது.

விடை: ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்கு உணவு, அறுசமயத்தார்க்கு உண்டி, பசுவிற்கு வாயுறை, சிறைச் சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச் சோறு, மகப் பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய் மருந்து, வண்ணான், நாவிதன், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெ, பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், கன்னிகாதானம். ஆகிய இம்முப்பததிரண்டு அறங்களைச் செய்ய விரும்புவதே தர்மமாம்.

வினு: இனி அதர்மங்கள் யாவை.

விடை: பாவமாம்.

வினு: அப்பாவங்கள் எத்தனை வகைத்தாக இருக்கும்.

விடை: பாவங்கள் அனேக ரூபமாயினும், கொலை, களவுகள், காமம், பொய் என்னுமிவ்வைந்துமே பஞ்சமகா பாதக மென்று சொல்லப்படும்.

வினு: அவற்றுட் கொலை என்பது யாது.

விடை: ஒருயிரைக் கொல்லுதல் தலையான பாதகமாம்.

வினு: ஆனுல், தன்னைக் கொல்லவந்த பசுவையும் கொல்லலாமென்னும் வார்த்தை பிழையோ.

விடை: பிழையேயாம்.

வினு: அ:தெப்படி

விடை: அப்படிச்சொல்லியிருப்பது ஏனென்ருல், சமயோசிதமாக க்ஷத்திரியர்க்கு யுத்தமுனையிற் கூறியதே யன்றி உனக்கன்று.

வினு: ஆனுல், என்னை ஒருவன் கொல்லவந்தபோது சும்மா யிருக்கலாமா.

விடை: சும்மாயிராமல் அவனைக் கொலை செய்தால் இம்மையில் இவ்வரசன் சிக்ஷைசெய்வது மன்றி மறுமையில் நரக தண்டனைகளும் உண்டாம்.

வினு: இதற்கு உதாரணம் ஏதேனும் உண்டோ.

விடை: அப்படியே உண்டு.

வினு: அதெப்படி.

விடை: பாடல்.

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை,

என்றும்,

அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந்தரும்,

என்றும், திருவள்ளுவரும்.

கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே
கூறரிய மேலான ஞானமாகும்
கொலையாதி யகன்றெழுகும் தவங்கள்தானே
குற்றமிலா நற்றவமென்றுரைககு நூலும்
கொலையாதி யகற்றிய நல்லறங்கள்தானே
குவலயத்தில் ஒப்பறிய அறங்களாகும்
கொலையாதி அகன்றுபெறும் செல்வந்தானே
கூறினுயிர்க் கிதமான் வாழ்வதாமே

என்று சிவஞான தீபத்திலும.

தன்னைக்கொல்லினும் தான்பிறி தொன்றினைக்கோறல்
பன்னிற்பாவமென்று அறைகுவர் கற்றுணர்பழையோர்

என்று பிரபுலிங்க லீலையினுங் கூறியிருக்கின்றது.

வினு: அறிவினையுடைய மனிதனைக் கொன்றுற்றுன் பாதகம் அறிவில்லாத மிருகங்கள், பக்ஷிகள், மச்சங்கள் இவை முதலியவைகளைக் கொன்றுலும் பாதகமாமோ.

விடை: அப்படியானுற்றுங்கள் பெற்ற அறிவில்லாத சிசுக்களைத் தாங்களே கொல்லலாமல்லவா.

வினு: ஆனுல் சின்னமீன்கள் பெரிய மீனுக்கு இரை யாவதுபோல் சின்ன சீவன்களை பெரிய சீவன்கள் கொன்றுல் என்ன.

விடை: ஆனுல் அவை அறிவின்மையால் அப்படிச் செய்கின்றன. நீயும் அம்மிருகங்கள் போல் அறிவற்ற வன் தானே.

வினு: மனிதரை மனிதர் கொன்றுல் பாதகந்தான். மிருகாதிகளைக்கொலை செய்து உண்டால் அதுவும் பாவ மாகுமா.

விடை: அதுவும் இப்பாதகத்தைப் பார்க்கினும் வேறன்றே.

வினு: மனிதருக்காகவே முக்கியமாகக் கடவுள் சகல பதார்த்தங்களையும், மிருகங்களையும், படைத்திருக்கின்ற படியால் கொன்று தின்னலாம் அதற்குக் குற்றமில்லையே.

எதிர் வினு: அம்மனிதர்க்காகவே சகல பதார்த்தங் களையும் மிருகஜெந்துக்களையும் உற்பத்தி செய்திருக்கும் பொழுது ஈ, புழு, மலம், வற்சநாபி முதலானவற்றை ஏன் தின்னுது விடுகின்ருய்.

எதிர் விடை: அவை பிரயோசனப்படாதென்று தள்ளி விட்டனம்.

எதிர் வினு: பிரயோசனமாகிய மிருகங்ககளில் சிங்கம், யானை, புலி, கரடி, பாம்பு, தேள் இவற்றை உனக்குபகார மாகப் படைத்தாரென்று சொன்னையே அப்படியிருந்தால், மனிதரைக் கொன்று தின்று காதக மிருகங்கள் என்று சிறப்புப் பெயரையும் அடைந்திருக்கவேண்டுவதென்ன.

எதிர் விடை: மற்ரெரு காலத்து மனிதர்க்குள் அடங்காதிருக்கும்படி கடவுள் சாபங்கொடுத்தார்.

விடை: அப்படி சாபம் கொடுத்தது மெய்யானுல், மாடு, குதிரை, யானை, ஒட்டகம், பாம்பு, தேள் முதலியவை களில் சில மனிதர்க்குள அடங்கியும், அடங்காமையுமாக இருப்பானேன், ஆதலால், அவர் சாபங் கொடுத்ததே யில்லை. அல்லது கொடுத்துந் தப்பிற்றென்பையாயின், அக்கடவுள் அசக்தருகிருன் ஆதலால், உன்னுரை முழுதும் பிழையாம்.

வினு: தான் கொல்லாமல் ஒருவரிடத்தில் விலை கொடுத்து வாங்கி புசிக்கவும் கூடாதோ.

விடை: அதுவுங்கூடாது.

வினு: அஃதென்னத்தினுல்.

விடை: உண்பவனில்லா விட்டாற் கொல்பவனு மில்லை யென்றுணர்வாய்.

வினு: விலை கொடுத்து உண்டாலும் தீமை யென் பதற்குப் பிரமாணம் உண்டோ.

விடை: உண்டு.

வினு: அஃதெப்படி.

விடை: பாடல்.

தினற்பொருட்டாற் கொள்ளாதுல கெனின்யாரும்
விலைப்பொருட்டாலூன் தருவாரில்,

என்று, திருவள்ளுவ நாயனுரும்.

அலைப்பானு யிர்தனையாக் கலுங்குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங்குற்றம்
கொலைப்பால வல்லாற் கொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றம் குற்றமேயாம்.

என்று, "புலான் மறுத்தல்" என்னும் சாத்திரத்தினும் சொல்லியிருக்கின்றது.

வினு: ஒருவன் பிரியமாக அழைத்து மாம்சம் படைக்க அவன் தடுத்துங்கேளாது வலிமையிற் கொடுத்ததைப் புசித்தலால் தோஷமுண்டோ.

விடை: உண்டு.

வினு: அதெப்படி.

விடை: திருடனேடு சேர்ந்தவனையும் அவன் பொருளைப் புசித்தவனையும் அத்திருடனேடு சேர்த்து அரசன் எப்படி தண்டிப்பானே அது போல மாம்சம் கொடுத்தவனையும் தின்றவனையும் எமன் தண்டிப்பானென்று உணர்வாயாக.

வினு: அல்லது தானே யிறந்த சீவனை உண்ணவுங் கூடாதோ.

விடை: கூடாது.

வினு: அஃதெப்படி.

விடை: முன் ஊனின் சுவையை உண்டறிந்தமையால் சீவன்கட்கு மரணம் நேரிட்ட விடத்துக்கண்டு ஐயோ வென்றிரங்காது மிகக்களிப்புடையவனுதலாலும் நல்ல ஊன் நிறைந்த உயிர்களைக் கண்டவிடத்து இது என்று மரணமாம் என்கிற தீய நினைவை உண்டாக்கலாலும் எவ்வளவுங்கூடாது.

வினு: உயிரை வதைத்தவர்களுக்கும் ஊனையுண்டவர்களுக்கும் முன்னேர்கள் என்னதான் இன்னு சொன்னுரையா.

விடை: பாடல்.

பொருளாட்சி போற்ருதார்க் கில்லையருளாட்சி
ஆங்கில்லை ஊன்றின் பவர்க்கு

என்றும்,

செயிரிற்றலைப் பிரிந்தகாட்சி யாருண்ணுர்
உயிரிற்றலைப் பிரிந்த ஊன்,

என்று திருவள்ளுவனுயனுரும்.

பொல்லான் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங்காண யியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றித்தீவாய் நரகிடை
மல்லாகத் தள்ளிமறித்து வைப்பாரே.

என்று திருமந்திரத்தினும்.

எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்
இலங்குமு யிருடலனைத்து மீசன்கோயில்
எவ்வுயிரு மெம்முயிர்போல் என்றுநோக்கி
இரங்காது கொன்றருந்தும் இழிவினோரை
வவ்வியெமதூத ரருந்தண்டம் செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்திமாரு
வேதனைசெய் திடுவரென வோதுநூலே,

என்று சிவஞான தீபத்திலும்.

உயிர்வருத்தி ஞேர்தமை யயத்தண்டினுலொறுத்துச்
செயிர்கொள்கும் பிகற்பாந்தத்தி னளவும்சேர்த்திடுவார்,

என்றும்.

எளியரைவதைத்தபாவி யிருகரங்காலு மில்லான்
அளியுறுமடியார்க் காய்தோனழுகுடற் றெருழுநோயாளன்

என்று சூதசங்கிதையிலும்,

கொன்றுவிலங்கின் றசைநுகரும்
கொடுமையோ ரவ்விலங்கினுடன்
றுன்றுமயிரொத்துணை யாமத்துணைய
காலம் வெந்நரகில்
ஒன்றிநுகர்வாய்ப் புழுஒழுக
உழப்பரெனகை யுணர்ந்தேயோ
கன்றுசினவெங் கொடுவிலங்கும்
புலவூன் றின்னக்கருதாவால்,

என்று காசி காண்டத்திலும், இன்னும் அனேக சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. இன்னும் சொல்ல வேண்டுமாயின் இவ்விடதது மிகவும் விரியுமென்று விடுத்தனம். எவ்விதத்தானும் கொலை செய்து உண்ணலாகா தென்பதே நிச்சயார்த்தமாம்.

வினு: கொலை செய்து ஊனுண்ணல் பாதகம் என்பதற்குச் சந்தேகமில்லை. இனியிரண்டாவது பாதகமாவதென்ன.

விடை: களவேயாம்.

வினு: களவு செய்தலும் தீதோ,

விடை: அதுவும் தீதோ வென்று கேட்கும் இப்படிக்கொத்த சொற்ப வறிவினையுடைய உன்னைக் கையிற் புண் பார்க்கக் கண்ணாடி தேடும் குருட்டு மூடனுக்கும், சூரியன் குஞ்சென்று இறப்பில் விளக்கையெடுத்து ஒளித்து வைத்த குடிகேடனுக்கும் கூடப்பிறந்த விசேடனென்றே சொலலலாம்.

வினு: அப்படியானுல் "ஈயார் தேட்டைத்தீயார் கொள்வர்" என்றதாக்கு அர்த்த மென்ன.

விடை: ஈயார்—கொடாதவருடைய, தேட்டை—திரவியத்தை, தீயார்—திருடர், கொள்வர்—அபகரிப்பர் என்பதாம்.

வினு: அப்படி யிருக்கத் தருமதானம் செய்யாமல் எளியவரைக் கெடுத்துச் சம்பாதித்திருக்கின்ற லோபிகளின் பொருளைத் திருடவும் அவர்களைச் செவ்வையாகத் தண்டிக்கவுந்தானே திருடர்களை வைத்திருக்கிருர்.

விடை: அதன் தாத்பரியத்தை உனக்குச் சொன்ன போதிலும் உன் முரட்டுத் திருட்டுக் குருட்டறிவுக்கு நான் சொல்லுவது ஏற மாட்டாது. லோபிகள் பொருளைத் திருடவும் அவர்களைத் தண்டிக்கவும் எங்களைததான் கடவுள் வைத்திருக்கின்ருர் என்று, ஒருவர் வீட்டில் திருட்டுத்தனமாக தலையை நீட்டிப்பார்த்துப் பெட்டியை எடுப்பையேயாஞல், அப்போது தெரியும்.

வினு: அப்போது தெரிகிற தென்ன ஓட்டங்காட்டு கிறேன்.

விடை: ஓட்டங்காட்டிஞல் உன் பாட்டன் அரசன் கேட்டு முதுகின்மேற் போட்டு செகம் பழிக்க வாட்டி, காலில் விலங்கைப்பூட்டி நீ பல்லைக்காட்டிக் கேட்டாலும், கண்ணடுக்கக் காட்டிடுவார்கள் மண்ணெடுக்கப் போட்டிடுவார்கள்.

வினு: அஃதிருக்கட்டும் களவு செய்தல் குற்றம் என்றதற்கும் அக்குற்றத்தால் அலக்கண் இலக்கமின்றி வருமென்றதற்கும் மேற்கோளுண்டோ.

விடை: உண்டு சொல்லுகிறேன் கேட்பாயாக.

பாடல்

எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கத்தன் னெஞ்சு,

என்றும்,

களவின்கட் கன்றியகாதல் விளையின்கன்
வீயாவிழுமந் தரும்,

என்று, திருக்குறளிலும்.

கரிசின்மறையோர் பொருள்பூமி கவர்ந்தோர் பிரமராக்கதரும்
அரியதனதானியக் கரவிலமைந்தோன் கருமுடிகமாவான்
விரியுநறிய புனல்கவர்ந்தோன் வெறுக்கத்தக்க மண்டூகம்
தெரியவொலி வெண்கலக்கரவு செய்தோன் அஞசாம்பிறப்பாளன்

என்றும்,

பருத்திகள்ளினன் குரண்டம்பட்டுநூல் கள்ளினின்ற
வருத்தியன்சிச்சிலிப் புள்ளாவன் சாகாதிகொண்டோன்
பொருதுகட்சிறை மயூரம்பூக்கவர்ந் தவனுயாவன்
மருத்தைப்பழங்கள் கொண்டோன் மற்கடவுருவங்கொள்வான்

என்று சூத சங்கிதை முதலிய அனேக சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதாதலால், இம்மையில் பழியாதி தண்டனைகள் அல்லாமல் மறுமையில் சனன நரகாதி தண்டனைகளுமுண்டாம்.

விஞ: ஆனால் இனி மூன்றுவது பாதகமாவதென்ன.

விடை: கள்ளுண்ணலாம்.

விஞ: ஆ, அதற்கென்ன குற்றமிருக்கிறது. தான் கஷ்டப்பட்டு சப்பாதித்துத் தன்னுடம்பு சௌக்யத்துக்குச் சாப்பிட்டால் பாவமா? இதென்ன வல்லிடியா யிருக்கிறதே, தன்சோறுதின்று தன்புடவை கட்டி வீண்சொல் கேட்க விதியா. நல்லது, கள்ளுண்ணல் பஞ்சமா பாதகத்துள் ஒன்றென்றீரே அம்மதுவானது வெகு பெரிய மனிதர்களால், இச்சிக்கப்பட்டதாயும் காலையில் வேலையில்லாது இப்பாலை ஓரோலை முடக்கி மூலையினின்று, சுட்டாது நெட்டினல் கெட்டவியாதி விட்டோடிப் போகுமென்று அனேக முரட்டர் அரிட்டர் மிரட்டியுநட்டிச சொல்லுகிறார்கள். இதன்றி, இடடமோடு இம்மட்டினை துட்டமீதவதைக்கு இட்டால் கட்டமென்பது எட்டிப்பாராதென்று அனேகர் சொல்வதைப் பொய்யென்று எப்படித் தள்ளலாம்.

விடை: அனேக மது பானிகள் சொல்வதைத் தானே ஓர் ப்ரமாணமாகச் சொன்ன உன புத்தி யெப்படிப் பட்டதென்றால்,

## பாடல்

கழுதை காவெனக் கண்டுநின்றாடிய வலகைத்
தொழுது மீட்டுமக கழுதையைத் துதிசெயவதுதான்
பழுதிலா நமக்கார்நிகார் மெனப பகரும்
முழுதுமூடரை மூடர்கொண்டா டிய முறைபோல்

நீ சொல்வதைக் குற்றமென்று சொன்னால், உனக்கு இழிவாகத் தோன்றும். பஞ்சமகா பாதகத்துள் இது நடுத் தரந்தான் பிசகில்லை.

விஞ: அப்படி அதிலென்ன குற்றந்தான் இருக் கிறதோ சொல்லும் பார்ப்போம்.

விடை: அதைச்சொன்னால் "யதார்த்த வாதி வெகு ஜன விரோதி" என்று பழமொழிப்படி இருக்குமே இதன்றி.

(ஸ்ரீமுகஞ சித்திரைமீ பதிப்பித்த ள்ள, பிரகலா தாழ்வார் சரித்திர கீர்த்தனை வேலூர், வேங்கடகிருஷ்ண தாஸர் இயற்றியது.

"உள்ளதை உரைப்பாஞகில் உலகினில் அவன்விரோதி
உள்ளதை உரையாஞகில உலகினில் அவன் விரோதி
உள்ளதை உரையாஞகில் உயர்நரக டைதலாலே
உள்ளதை உரைப்பேனயயா உகநதுநீர் ஒழுகல்நன்றே.")

## பாடல்

"கல்லாத மாந்தர்க்குக கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க்கு அறங்கூற்றம்"

இதல்லாமலும்

வானரமழை தனில்நனைய தூக்கனான்
தானொருநெறி சொலததாணடி பிய்த்திடும்
ஞானமுங்கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக் குரைத்திடில் இடரதாகுமே

என்கிற வாக்கியங்களையே சிலாக்கியமாகச் செய்வீராகில் நானெப்படிச் சொல்லுவேன்.

எதிர் விடை: அப்படிக்கு இருக்க மாட்டாது. நீர் சொல்லுகிற நீதியானது சாத்திரகதிற்கும் அனுபவ நேத்திரத்திற்கு தரும பாத்திரத்திற்கும் தக்க சூத்திர மானுல் தடையின்றிச் சொல்லலாம்.

விடை: நீ இவ்வளவு பரிவாய்க் கேழ்க்கின்ற படியால் அதில் வரும் துனபங்களை சிற்சில சொல்வேன் கேட்பீராக. இம்மையிலிழிவும் பழியும் மறுமையினரகக் குழியுமாம்.

வினு: அஃதெங்ஙனம்.

விடை: நீர் பாரும் முன்னமுன்னம் சிலர் கரியல் பொரியல் பரிவாய்க் கறிகள் வைதது தினன நோக்கி இவனுக்கில் நீர் தேககி மௌள வெள்ளைக் கள்ளை உள்ளிற் கொள்ளத் தாட்டியோடு தலையாட்டி பரிபோட்டு வெறிகுட் ஒெவர் மபிண்டென்று சில நேசரெனறும் மோசக்காரக் கொடியராகிய குடியரைச் சேர்த்துக் கொண்டு அம்மதுவைத் தொட்டுப் பார்ததுப் பின வெட்ட லேறிப் போனுற் சட்டமருட்டம் வெகுதிட்ட மென்று நினைத்துக் கனைததுச சினததுந தன்வீட்டாளை யோட்டி ஒரு பாட்ளு போட்டுக்கொணடு வீட்டில்வா நானும் மாட்டிக்கொண்டு பேசாதே நீட்டிககொளளுகிறேன்.

என்று, இப்படிச் சில நாள் போக்கிப், பக்கம் பார்த்துக் கொண்டு முக்காடொன்று போட்டுக்கொண்டு தொண்டை தெரியாது கடையண்டையிலே நின்று கூட்டம் பார்த்துக் கைநீட்டி யாட்டி வெறியாசையால் கறிதோசையோடு வாட்டமின் மதுவைத் தாட்டியோடு மூட்டிக்கொண்டு வேட்டியைப் போட்டு வீட்டினில் தலையை நீட்டிக்காட்டி, இப்படி சில நாள் ஓட்டி, என் சொந்தப் பணத்தால் சாப்பிடும் போது எந்தப்பயத்தால் இந்தப் பயல்களுக்கு குந்தியைக் குடிக்கச் சிந்தனைப் படுவதென்று, நட்பும்விட்டு வெட்கங்கெட்டுப் பெட்டிக்கொண்டு கொட்பு முதிர்ந்து திடனேங்கி கடன் வாங்கி வட்டி மேலிட்டு அட்டிகை, வட்டிகை, பட்டிகை, நடையும், உடையும், காடும், நாடும், மாடும், ஆடும், வீடும், ஓடும் பத்துக் கொன்ருய் விற்றுக் கொடுத்து குடையும், நடையும் அடையும் படையும், கடுத்து விடுத்துச் சேலை யொறுத்துத் தாலியறுத்து எல்லா மெடுத்து நல்லா குடித்து ஏப்பங்கொண்டு இறு மாப்புங் கொண்டு, எண்ணங்கழல கண்ணுஞ்சுழல, ஏதுமில் பாவியாய் வீதியில் வீழ்ந்து காயமறந்திருக்கச் சளசளவென வாந்தி யெடுக்க மொள மொளென வீய் கண் முடுக்க, இருங்கல் லென்று, பெருநாயெல்லாம் வாலையும், காலையுமேலேயெடுத்துப், பாத்திரமென்றது மூத்திரஞ்சொரிய, ஏதிதுவென்றுந் தூதுதுவென்றும் எழுந்து விழுந்து அரண்டு புரண்டு எட்டி முட்டித் தட்டுப் பட்டுக் கெட்டலைந்து நல்லோரேசப் பொல்லார் பேசக் கண்டோர் பதைக்கக் கொண்டாள் உதைக்க, வாதாடிச் சூதாடி வண்டைப் பாட்டுப்பாடிச் சண்டைக் கோர்ட்டுத் தேடி, மயங்கி முயங்கித் தயங்கிச் சாலியாலே கேலி கொண்டு முரடிநின்று திருடுகண்டு, புலியன்போலச்

கொலைகள் புரிந்து, எல்லாப்பாதக வல்லோனுக்கும், பொல்லாக்கள்ளைத் தள்ளுந்தள்ளென, நாயனுர் முதல னேகர் சொல்லியிருக்கிருர்கள்.

வினு: அம்மேலோர் எவ்வாறு சொல்லியிருக்கிருர்கள் அதைச் சொல்லும் பார்ப்போம்.

விடை: பாடல்.

துஞ்சினுர் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண்பவர்

என்றும்,

கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்
உள்ளான் கொலுண்டதன் சோர்வு,

என்றும்,

நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணுப் பெருங் குற்றத்தார்க்கு

என்று, திருவள்ளுவ நாயனுரும்

தீமைபயக்கும் சுராபானம் செய்தபாவி மலம்புசிக்கும்
தூய்மையடையா வுடல்வீக்கித் துக்கத்துழலு முயிர்களாய்
காமதடையும் பறவைகளாய் நலமிங்கிருமி கீடமாய்த்
தோமதுறுபல் பவமெடுத்துச் சுழன்றுதிரிவான் பற்பலநாள்

என்றும்,

கள்ளருந்தினோர் நாவினைவாள் கொடுகடிந்து
விள்ளருந்தழற் பொறியெழு நீரைவாய் விடுவபர்

என்றும், சொல்லியிருக்கிறது.

வினு: அப்ப இப்பா எப்பா மெய்ப்பா செப்பா யப்பா.

விடை: வியாச மகா முனிவர் மாணுக்கரில் ஒருவராகிய ரோமரிஷி புத்திரர் சூதபஹூா முனிவர் சௌனகாதி முனிகளுக்குத் திருவாய் மலர்ந்திருப்பதன்றியும்.

கீர்த்தனை

பித்தாம் உடம்பிற்கு மத்தம் பிறப்படும்
பெண்ணென்றும் தாயென்றும் தெரியாமலேவிடும்
குத்திர மாநரகத்தி னிலேயிடும்
கொடுத்தவன் அடுத்தவன் எடுத்தவனும் கெடும்
மதுவே யுன்னுற் கெட்டதிதுவே

என்று இராமாயணத்திலும் சொல்லியிருக்கிறதாதலால் கட்குடித்தல் குற்றமேயாம்.

வினு: நல்லது மதுபானம் நீர் சொன்ன ஞாயங்களைக் கொண்டு செய்யலாகாதுதான். இதரமான மயக்க வஸ்துக்களைச் சாப்பிட்டாலும் குற்றந்தானே.

விடை: குற்றமே.

வினு: அப்படி குற்றமானுல், "சாராயங் குடிப்பான் பிரம்மத்தை ஆராய்ந்து பிடிப்பான்" என்று, சில சொல் விளம்பிகள் சொல்வதற்குப் போதும் வழியென்ன.

விடை: நீ சொல்லுவது எப்படி யிருக்கிறதென்றுல், கொழுக்கட்டைச் சுட்டுப் போடென்று சொல்லத் தெரியாது. அத்தேரிபாச்சா சுட்டுப் போடு என்று தன் மனையாட்டியை யடித்த அறிவிலிபோலக் குளறுகிருய்.

வினு: பின்னெப்படி சொல்லுகிறது நீர் தான் சொல்லுமே.

விடை: "சாராயங் குடிப்பான் பெருநரகில் மாளுது துடிப்பான்" என்று, நீ சொல்வாயாக.

வினு: இவற்றிற்கு மேற்கோளுண்டோ.

விடை: உண்டு.

வினு: அஃதெப்படி.

விடை: பாடல்.

கையறியாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறியாமை கொளல்.

என்று நாயனுர் குறட்பாவிலும்.

நாறுகின்ற சாராயவெறியினுலே
நரகமதிலுழலுகின்ருர் நாடிப்பாரே.

என்றேர் இதிகாசத்தினும்.

கள்ளுண்டு தள்ளுண்டு நில்லாதேயபின்
கஞ்சா வுறக்கமுங் கொள்ளாதே
உள்ளுண்டு சோமக் கலைமதி பானத்தை
யூட்டி கொம்மியடியுங்கடி.

என்று பாலையானந்தர் முதலனேகம் பெரியோர் சொல்லித் தள்ளியிருப்பதால் தன்னறிவை மயக்குகின்ற யாதொரு மயக்க வஸ்துக்களுண்டோ அவற்றை யெல்லாம் சாப்பிடக் கூடதென்பதே இவ்வாக்கிய சித்தாந்தமாம்.

வினு: இனி நான்காவது பாதகமாவதென்ன.

விடை: முன் சொன்ன காமமேயாம்.

வினு: அந்தக் காமம் என்பது எல்லா நன்மையையும் பெறுதற்கு மூலமாக இருக்க அதனைக் குற்றமென்றால் நீரு மற்று நானுமற்று ஏதுமற்ற பாழிடமாகும். இதற்கு மேற் கோள் பாரும்.

பாடல்

காமமே சையோகம் காமமே மெய்யோகம்
காமமே மெஞ்ஞானம் காமமே யஞ்ஞானம்
காமமே வேதாந்தம் காமமே சித்தாந்தம்
காமமே நன்மோக்ஷம் காமமே காரணமே.

என்று, இவ்வாறு கூறியிருக்கின்றது.

விடை: தெரியாத செவிடன் காதினிற் சங்கு குறித்த தென்னச் செப்பல் போலும், நானொன்றைச் சொல்ல நீ யொன்ருகப் பொருள் கொள்ளுகிருய் அப்படிக்கல்ல.

வினு: மற்றெப்படி நீர் சொல்லும்.

விடை: தன் மனைவியை யன்றி, அயன் மாதரைப் புணர்தலே காமம் என்றதற்கு அர்த்தமாகும்.

வினு: அன்னியமாதரைப் புணர்ந்தால் குற்றமென்ற தற்குப் பிரமாணம் யாது.

விடை: பாடல்.

பகைபாவமச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

என்றும்,

எனைத்துணையராயினு மென்னும்திணைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

என்று திருக்குறளிலும்.

புக்கவிடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்குமிடத்தச்சந் தோன்ருமற் காப்பச்சம்
எக்காலுமச்சந் தருதலா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்.

என்றும்.

செம்மையொன்றின்றிச்சிறியாரினத்தராய்க்
கொம்மைவரிமுலையாள் தோள்மரீஇ—யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்ருரேயிம்மை
அலியாகியாடியுண்பார்.

என்று நாலடியாரினும்.

“ஏதிலாமனை தழுவிய இழுதையர் தம்மைக்
காதிமாவதி கோரமாநரகிடை கவிழ்ப்பார்.

என்று, சூதசம்ஹிதையிலும்.

நாரங்கொண்டார் நாடுகவர்ந்தார் நடையல்லா
வாரங்கொண்டார் மற்ருெருவர்க்காய் மனைவாழும்
தாரங்கொண்டார் என்றிவர் தம்மைத்தருமந்தான்
ஈருங்கண்டாய் கண்டகருய்ந்தார் எவரையா.

என்று கம்பராமாயணத்திலும்.

“கற்பழிமனைவியோடு கலந்திருப்பவனும் மற்ருேர்
பொற்புடை மனைவிதன்னைப் புணர்வதற்கெண்ணுவானும்.”

மகா பாவிகளென்று, பிரபுலிங்கலீலையிலும் சொல்லியிருக்கின்றது.

**வினு:** ஆனுல், வேசை, தாசி, விதவை, யடிமை, கன்னி இவர்களைச் சேர்ந்தாலும் தீதுதாஞே.

**விடை:** தீதேயாகும்.

வினு: அஃதெப்படி.

விடை: பாடல்.

கன்னியை யழிசெயக் கருதினேன்குரு
பன்னியை நோக்கினேன் பருகினேநரை
பொன்னிகழ் களவினிற் பொருந்தினேனென
இன்னவருறுகதி யென்னதாகவே.

என்று கம்பராமாயணத்திலும்.

கன்னியரைப் பொன்னுண் கழிந்தோரை மற்றபலார்
பன்னியரை மாயப்பரத்தையரை—உன்னரிய
தாதியரை நல்லோர் தழுவலினையார் நரகத்
தீதுவருமென்றே தெரிந்து.

என்றும்.

சீலங்குல மடியாடீண்டிற் கெடுங்கணிகை
ஆலிங்கன நரகமாகும்—நூலிழந்த
வல்லிதழுவக்குறையும் வாளுள்பிறர்தாரம்
புல்லினர்க்கு எல்லாநலனும்போம்.

என்று இவ்வாறு அனேக நீதிநூலிற் கூறியிருக்கின்றன.

வினு: பொல்லாச் செய்கைகளெல்லாம் ஒல்லாதெனச் சொல்லா நின்றவரே மணம் செய்த மங்கையரைச் சங்கை தங்க வீட்டில் மங்கவைத்து, அன்னிய மாதர் கொங்கை பொங்க தங்கள் செங்கையங்கைதங்க இங்கித மனுபவித்த புருஷர்கட்கே குற்றமுண்டெனில், தெய்வ புரோகிதாக்கினி சுற்ற சாக்ஷியாகக் கலியாணம் செய்து கொண்ட கணவன் மனங்கலங்கச் செய்யும் காதகிகட்கு ஒரு பாதகமும் இல்லையா.

விடை: உண்டு. அதனையும் சொல்வேன் கேட்பா யாக தங்கள் கணவனையே தெய்வமென்று எண்ணுத

அவன் மனம் நோகச்செய்யும் முண்டைகட்கு உண்டாகும், தண்டனைகள் ஏட்டில் தீட்டிக் காட்ட வாட்டமாயினும் சில கேட்டுக்கொள்ளும். தன் கணவன் சொல்லைத் தட்டினவள் குட்ட நோயாதியிற் கட்டுப்பட்டுக் கெட்டுப்போவாள். அவனோடு கோபித்து பேசினவள் சீயென இகழ்ந்து பேசப்படும் நாயாகப் பிறப்பள். அவனை துட்டமார்க்கமாக வைதவள் வாய்க்கடையிற் புழுச்சொரிந்து கொண்டிருக்கும் புலியாகப்பிறப்பாள். அப்புருஷனை வஞ்சித்து உண்டவள் மலம் புசிக்கும் பன்றியாகப் பிறப்பாள். அன்னிய புருஷனை யிச்சித்தவள் இம்மையில் இழிவு கொண்டு படாத பாடும் பட்டிறந்து எமதூதராலடிபட்டு அந்த அன்னிய புருஷனைப்போல எஃகினலியற்றி நெருப்பில் பழுக்கக்காய்ச்சிய ப்ரதிமையை அணையப் படுவன் அவன் சொற்களை இச்சித்துக் கேட்ட செவிகளில் ஈயத்தை உருக்கி விடுவார்கள். அவன் கொடுத்த புட்பத்தை சூடிய கொண்டையில் நெருப்பை வைப்பார்கள். அவன் புடவையை உடுத்திய உடம்பை வாச்சியால் செதுக்கி தீயால் வெதுப்பி விடுவார்கள். இப்பாடெல்லாம் பட்டு புழுபுழுத்து நெளியானின்ற நரகத்தில் அனேக காலங்கிடக்க அடித்துத் தள்ளுவர்கள்.

வினு: இதற்குக் கூறிய மேலோர் வாக்கியப்பிரமாணம் ஏதேனும் உண்டோ.

விடை: சொல்வேன் கேட்பாயாக.

பாடல்

பதிவிரதையர்க்கு மணவாளன் மகிழச்செய்யும்
பணிவிடையை யன்றிவேறோர்
மனுதவுவிரதமிலை புண்டென்றசெப்புமவன்
பதியினுயிரைக்கவர்ந்து

துதியற்ற நரகலோகஞ் சேர்வள் அவனுடைய
சொற்படி செயாதவள்மிகு
துன்பநோயினிலுழல்வள் கோபித்துரைக்குமவன்
துட்டகுணமா வைபவள்
சதியாகமுன்புசிப்பவள் முடுவலாகவும்
தாவுமொரு புலியாகவும்
தாழ்வான பன்றியாகவு மறுமை தன்னிலே
சனனமாயலைவரென்பார்.

என்று குற்றமற்ற மனுநூலிலும்,

கொண்ட கேள்வனைப்பிழைத்து மற்றொருவனைக்குறித்து
பெண்டிராண் உருவிரும்பினை அழலிடைபிறக்கி
மண்டநேர்தழுவுறவொறுப்பார் மனைபிழைத்த
கண்டருந்தழலிருப்பமாதணைந்திடக்கடிவார்.

என்று, சூத சம்ஹிதையிலும்,

கணவனை வஞ்சித்தக் பொல்லாக் கன்னியரை
கொண்டுபோய் காலனூரில்
மணமுடித்த மண்டைகளை வாட்கைகொடு
கண்டதுண்டமாக வெட்டிப்
பிணமெனவே அவளுடலைக் கனலிலிட்டு
வாச்சயினுற் பிளக்கச் செய்து
நிணமொழுகப் புழுபுழுத்து கெடுநரகில்
கிடப்பளென நிகழ்த்தும் வேதம்

என்று ஓர் சத்திய விளம்பர சாத்திரத்திலுங் கூறி யிருப்பதை யுணர்வாயாக.

வினு: இனி ஐந்தாம் பாதகமாவதெது.

விடை: பொய் மொழி கூறல்.

வினு: பொய் சொல்லக்கூடா தென்பதற்குப் பிரமாணம் யாது.

விடை: ஹரிச்சந்திரன் முதல் அனேக புண்ணிய வான்கள் பொய்யாதி தீமையில்லாமையால் அவா பெற்ற பேறு ஆகமாதிகளால் தெரிவதனறியும்,

## பாடல்

பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

யாமெய்யாக் கண்டவற்றுளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையினல்ல பிற.

என்று, திருவள்ளுவரும்

"பொய்யை யுரைப்பான் புரைநர கெய்தி யிருப்பான்" என்ற பழமொழியும், "பொய்யிலார் உயர் மோக்ஷம் பெற்றவர் என்றினிதுரைக்கும் பொருள நூல் தானே" என்று ஓர் இதிகாசம் முதலனேக ப்ரமாணங்களுண்டா யிருக்கிறதாதலால், இக்கொலை களவுகள், காமம், பொய் யென்னும் பஞ்சமகாபாதகங்கள் முதலிய யாதொரு தீமையும் செய்யப்படா தென்பதாம்.

வினு: நல்லது இம்மையில் இச்சரீரமுள்ள பரியந்தம் தான் இப்படிக்கொத்த நன்மை தீமைகள் உண்டாகுமா அல்லது இச்சரீரம் நீங்கிய பின்னும் ஏதேனும் உண்டாகுமா.

விடை: இச்சரீராந்தத்தினும் இச்சரீரம் நீங்கிய பின்னும் தான் அனேக தீமைகளை அனுபவிக்கவேண்டும்.

வினு: அங்கனுபவிக்கும் நன்மைகள் யாவை.

விடை: நன்மை செய்தவர் அதற்குப் பயனாக தேவர்களால் பூசிக்கபபட்டு சுவர்க்க போகாதி ஆனந்தத்தில் அழுந்துவர். தீமைசெய்தோர் இயமன் தூதுவரால் அடிபட்டு கொடிய நரகங்களில் தள்ளப்படுவார்கள்.

வினு: இச்சரீரம் இறந்தவுடன் இங்கிருப்போர் இவ் வுடலைச் சுட்டெரித்தல், புதைத்தல் முதலிய க்ருத்யங்களைச் செய்து விடுகிருர்கள். அப்போது காற்று காற்றிலும், மண்ணு மண்ணிலும் லயப்பட்டுப் போய்விடுகிறது. அப்படி யிருக்க அங்கு எமலோகத்தில் யாரைப்பிடித்து அடித்து அடித்து நரகத்தின்கண்ண தள்ளப்படும்.

விடை: இச்சரீரத்தினின்று ஆத்மா வெளிப்படுதற்கு முன்னம் புண்ணியஞ் செய்தவர்களுக்கு பூதசார தேகமும் பாவம் செய்தவர்களுக்கு பூத தேகமும் ஓர் கணப் பொழுதில் உண்டாக்குவார்கள் என்று உணர்வாயாக.

வினு: இதற்கு பிரமாணம் யாது.

விடை: பாடல்.

அருந்துயர்க்குழியினுழ்வார் ஆகமே பாவத்தார்க்கும்
பொருந்திய பூதத்தாலே யிமைத்திடும்போது தன்னுட்
புரிந்து விண்புகுவராகம் புண்ணியத்தாலேயாகம்
பொருத்திய பூதசாரத்தொரு கணப்பொழுதுதன்னில்

என்று, சிவதருமோத்தர மென்னும் சிவாகமத்திலும் கூறியிருக்கிறது.

வினு: குற்றம் செய்த தேகம் இங்கே இருக்க அங்கே சிருட்டித்த தேகத்தைப் பிடித்து தண்டிப்பார்கள் என்றது எப்படி இருக்கிறதென்ருல், குற்றஞ்செய்தவன் தப்பித்துக் கொண்டோட குறுக்காக வந்தவனை வாய்மேலடித்தது போலிருக்கிறது.

விடை: அங்ஙனமன்று.

வினு: மற்றெங்ஙனம்.

விடை: இச்சரீரத்தில் பொருந்திய சீவன் அந்த யாதனு சரீரத்தில், பொருந்தினமையால் அதைத் தண்டிப்பார் என்று உணர்வாயாக.

வினு: அச்சரீரத்துக்கு யாதனு சரீரமென்று, பெயர் வரக்காரணம் என்னை.

விடை: எப்படிப்பட்ட ஆயுதங்களாலும் வெட்டிக் குத்தி சேதிக்கினும், சண்டமாருதத்தால் மோதுறச் செய்தாலும் அதற்கோர் அழிவின்றி, இதிற்பொருந்திய பாவ சீவனுக்கு, மேலும் மேலும் துன்பத்தை விருத்தி செய்விக்கும் திறத்ததால் அதற்கு யாதன சரீரமென்று பெயர் வந்தது.

வினு: ஆஹா! ஹா! இப்படிப்பட்ட சங்கைகட்கு எல்லாம் உத்தரங்கூறினவை அருமைக்கருமையா யிருந்த போதிலும், அப்படியொரு சரீரத்தில் இருக்கும் ஆன்மா மற்ருெரு சரீரத்தில் புகுதலை யிங்கு யாருங்கண்டதில்லையே.

விடை: நாமெல்லோரும் சொற்பனத்தில் வேருெரு சூக்ஷ்ம சரீரம் பெற்று எங்கும் சஞ்சரித்து அனேக புதுமைகளைக் கண்டிருப்பதன்றியும், பாம்பானது முதலில் முட்டையையே சரீரமாகப் பெற்றுப் பின்னதனையும் விட்டு வேருெரு சரீரங்கொண்டு அதையும் அடிக்கடி யுரித்தும் இப்படி அனேக மாற்றங்கள் கண்டிருக்கிருேம். ஆகையால் சூக்ஷ்ம சரீரமுண்டென்று உண்மையாக உணர்வாயாக.

வினு: மற்ருேர் உதாரணம் கூறும்.

விடை: பாடல்.

பன்னக மண்டசங்கள் பரகாயந்தன்னிற் பாய்வோர்
துன்னுதோன் முட்டையாக்கைதுறந்து செல்வதுவேபோலு
உன்னிய உயிர்கள் தூலஉடல்விட்டு வானினூடு
மன்னிடு நினைவுமாறிக் கனவினை மருவுமா போல்

என்று, சிவஞான சித்தியாரினும்,

நாகமுடலுயிர் போலு நல்லண்டசம்
போகுநனவை கனவில் மறத்தல் போல்
ஆகும்அரன் அருளால் சென்றருவினைக்
கேகுமிடஞ் சென்றிருப்பனுண்மையே.

என்று திருமந்திரத்திலும், சொல்லுயிருக்கிறதாதலால், வேறொரு சரீரத்திலிருந்து செய்த பாவ புண்ணியங்கட்குத் தக்க போக தண்டனைகளை அனுபவிப்பது உண்மை என்று உணர்வாயாக.

விஞ: முட்டையே சரீரமாக உடைய கோழியானது, அம்முட்டையை விட்டு வேறொரு சரீரத்தோடு எப்படி வெளி யாகுமோ அதுபோல் இச்சரீரத்தை விட்டவுடன் வேறொரு சரீரம் இருக்கிறதென்று உணர்ந்தேன். இப்பாவிகள் சரீரம் விடும் போது அடையும் மரணாவஸ்தையும், எமதூதரால் படுகின்ற பாடும் எமதர்மராஜன் தீர்மானமும், அங்கநரகாதி தீமைகளையும் விஸ்தாரமாகக் கேழ்க்க விருப்புற்றிருக் கின்றேன் அதை தயவுசெய்துரைத்து என்னை தன்னியனாக்கப் பிரார்த்திக்கின்றேன்.

விடை: அப்படியானால், சொல்லுவேன் கேளும். நமக்குக் கடவுள் கொடுத்த அறிவைக்கொண்டு வேதாக மங்களை வாசித்து யோசித்து நேசித்து பூசித்து நடவாத தோஷிகள் அடையும் மரண காலத்தில் இப்பாதகனுடலுக் குடலுஞ் செத்துப் பித்து முத்திக் கோழை முதிர்ந்து பீழையடைந்து கண்கள் சுழன்று நிலை நிற்கப் பெண்கள்

உழன்று தலை நிற்கத் தண்மிகுந்து கண்ணிருண்டு காதடைத்து வாயடைத்துக் காலும் சோர்ந்து தோலும் சோர்ந்து கையுமெய்யும் பொய்யாய்க் கரணங்கலங்கிவிட மரணம் துலங்கியிடக் காதகராம் எமதூதர் கறுத்து ஒறுத்துக் கட்டப்படு பாசத்தோடு வெட்டைப்படு சுவாசச் சூடு ஆசுவேகமாக, வெறுக்க விழி கனல் பறக்க உறந்து பறந்து மேவித்தாவிக் கூவி இப்பாவியினுவியை யடித்தும் பிடிப்பார்கள்.

விஞ: அப்போதிவனுக்கு எப்படிக் கொத்தவாதை யுண்டாயிருக்குமையா.

விடை: ஆஹா ஹா அந்த மரண காலத்தில் படும் அவஸ்தையை நினைக்கும் போதே உடல் நடுங்குகிறதே அதை என்னென்று கூறுவேன். முன்னோர் சொல்லி யிருக்கிறதைப்பாரும்.

உதாரணம் — பாடல்

பரணமாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டுதம்கையிற்றந்த
விரணமானவை கொணடிடவிவரை விட்டியிம் பிடாதிவனேகு
மரணவேதனையாவராலறியலாம் மயங்கிஐம்புலனந்தக்
கரணமியாவையுங் கலங்கிடவருந்துயர் கடவுளே யறியகிற்பான்.

என்றும்,

வந்திடுமரணத்துன்பம் அறிந்துரை செய்யப்போமோ
உந்திமேலையும்பித்தும் உணர்வொடு பொறிகலங்கி
சுந்திடாவிருளேமூடி நாவுலர்ந்தலமந்தென்னே
இந்தமாபிறவித்துன்பம் அததுன்பத்தெண மடங்கே.

என்று, பெருந்திரட்டாதி நூல்களிற் சொல்லுகிறபடி அவனை பிடிக்கும்போதும், பிணமும் சதையும், நரம்பும்,

எலும்பும் நார்போல் பீறி வேருய்க்கீறி முருக்கி நெரித்து உதை உதைத்துப் பதை பதைத்து, வண்ணீர்வாரக் கண்ணீர் சோர மலம் ஜலம் இழியத் தலந்தனையொழிய, வாய்திறக்கப் பாவிகள் தீபறக்கநாடி இவனுயிரைத்தேடி, நடித்துப் பிடித்து நாதஞரருளிலா யாதஞ சரீரத்தில் நாட்டி இவனுயிரைக் கூட்டிப் பிடித்துக்கொண்டு போகிற போது புத்திர மித்திர பௌத்திராதிகளெல்லாம் ஒல்லென வேம்பித் தேம்பிப் பதறிக் கதறி ஆவி சிதறி யிவர்கள் இப்படி அழ, எமபடர் அவனைக் கைப்பிடியாகப் பிடித்து அவன் கழுத்தைக் கயிற்ருல் இருக்கிச் சுருக்கிட்டு யம ஞுடைய பட்டணத்தை நோக்கிககொண்டு போவார்கள்.

*விஞ: இப்படி யிவனைக்கொண்டு போகிற மார்க்கத்தில் எப்படி யிருக்குமையா.*

விடை: அப்போது எப்படி இருக்குமோ அப்பா; என்ருல், செப்ப முடியாதாயினும், கொஞ்சம் சொல்லு கிறேன் கேள். இப்படியிவனை யிழுத்து கோரமாகிய ஆரண்ய மார்க்கத்தில் கொண்டு போகிறது, நரி, புலி, கரடி, சிங்கம், சர்ப்பம், நாய், பேய், பூதம், இரக்ஷசு இவை களெல்லாம், இவன்மீது நெறித்து எலும்புகளை முறிக்கக் காண்பான். ஐயோ! தண்ணீர் தாகமென்று அலறுவான். அப்போது அம்மார்க்கத்துளளோர்கள் ஈயத்தை உருக்கி சலம் போலே மொண்டு கொடுத்து அடிததுக் குடிக்கச் செய்து அடா அதர்மஞ் செய்த ஜடா என்று அவர்கள் இப்படிச் சில தூரம் சென்றபின அகோரப்பசியிஞல், அந்தோ அந்தோ இவ்வளவு அன்னங் கொடுங்கள் ஐயா என்று அழுவான். அப்போது எகுவிஞற் செய்து அக்கினி

வீசுகின்ற அன்னுதி உணவுகளைக் கொடுத்துச் சூலத்தாற் வேலால் குத்தித் திருப்பித் தள்ளிக் குருத்ரோகி கோபியடா பரத்ரோகி பாவியென்பார்கள். அதை விட்டு அப்புறம் செல்லும் போது தனது கொடிய பசியைச் சகியாதவனுகத் தன் மாமிசத்தைப் பிடுங்கித்தின்னும் தன் இரத்தத்தைக் குடித்தும் தான் செய்த பாவத்தை நினைத்துக் கோபித்துத் தன் கை கால்களைப் பிடித்துக் கடித்து மென்றுதின்று அதட்டிக் குதட்டுவன். அவ்விடத்து நின்று அலைத்து காடு, மேடு, பள்ளம், படுகுழி இதுகளில் மீது இழுத்துக் குறடாவினுல் முதுகு பிளக்கப் பட்டவனுய் மூர்ச்சித் திருக்கின்றவனை, அதிசீக்கிரத்தில் எமலோகம் கொண்டு போவார்கள்.

வினு: இவ்வுலகத்திற்கும் அவ்வுலகத்திற்கும் எவ்வளவு தூரம் இருக்கும்.

விடை: 9900 யோசனை தூரமிருக்கும்.

வினு: இவ்வளவு தூரவழியை எவ்வளவு காலத்திற் கடப்பார்கள் ஐயா!

விடை: இரண்டு முகூர்த்தம் அல்லது மூன்று முகூர்த்தத்திற் குடிபோய்ச் சேருவார்கள்.

வினு: அஃதெத்திசையில்.

விடை: தென்திசையில்.

வினு: அந்நகரத்தின் பெயரென்ன.

விடை: வைவஸ்வத பட்டணம்.

வினு: அதில் அரசன் யார்.

விடை: சூரிய சுதனுகிய எமதர்மராஜன்.

வினு: அவனுடைய நீதியின் ப்ரபாவம் எப்படிப் பட்டது.

விடை: பயங்கரமான அகோர கோப விகார ரூப முடையவனுகக் கேட்டவர் நடுங்கும் குரலுடையவனுக அனேக கோடி யமகணங்கள் புடைசூழக், காலன், மஹா காலன் என்னும் மந்திரிகளும் சண்ட மாருத ப்ரசண்ட விப்ரசித்த ப்ரதானிகளும், சித்திரகுத்திரர் என்னும், கணக்கப்பிள்ளைகளும் தன்னைச் சூழ்ந்து நெருங்கி யிருக்கக் கடவுளால் ஏற்படுத்திபிருக்கிற சத்தியமாகிய சிம்மா சனத்தில் இருக்க, அவன் சிரத்தின் மீது கடவுள் ஆக்கினையால், ஓர் பர்வதமானது ஓர் மயிர்க்காலிற்கட்டி, அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக்க, அவன் முகத்திற்கு நேராக ஸ்ரீஹரியின் சக்கரமானது சுழன்று கொண்டிருக்க அவன் இருக்கும் சிம்மாசனத்தின் கீழ் அக்கினி ஆறு எரிந்து ஓடிக்கொண்டிருகக, இத்தியாதிய ஆக்கினையுடன் இருந்து தீர்மானம் செய்யும்போது ஓர் பிசகுண்டாயின் அவனை தும்சப்படுத்திப் போடுமாக்கும். இப்படிப்பட்ட நீதியையுடைய எமதர்மராஜனிடத்து இவன் போன்ற அனேகம் பாவிகளைக் கொணடு போய் விடுப்பார்கள். அப்போது இவர்கள் என்னென்ன பாவங்கள் செயதவர்கள் என்று இயமன் வினவுவன.

வினு: அங்கு யாரை வினவுவன்.

விடை: சிததிரகுத்திரர் என்னுங் கணக்க தேவர்களை வினவுவன்.

வினு: இவ்விடத்திற்செய்த பாவ புண்ணியங்கள் அவர்களுக்கு எப்படித் தெரியும்.

விடை: கடவுளின் அருளால் சகல பாவ புண்ணியங்களையும் கண்டு எழுதும் வல்லமை பெற்றவர்கள் ஆதலாலே ஓரணுவேனும் மறையாமல் சொல்லுவார்கள்.

வினு: அப்போது அவர்கள் எப்படிச் சொல்லுவார்கள்.

விடை: குருவைத்துரோகம் செய்தோர். குலத்தைக் கெடுத்து வைத்தோர். கூத்திக்கிணங்கிப் படுத்தோர். அங்காடி கூடையை அதிரவிலையிட்டோர். பங்கில்லாப் பங்கைப் பதறியெடுத்தோர். வரியிறையால் குடிகளை வருத்தினோர். கொடுங்கோன்மை பெய்து குறைத்தோர். தாலி கட்டுங் கலியாணத்தைத் தடுத்தோர். வேலியிட்ட பயிரை மிதித்தோர். ஏழைகள் பொருளை எடுத்தோர். வாழ்னரைப் பொருது வதைத்தோர். அடியார்களை அலைய வைத்தோர். ஆசிரியன் குலையை எரித்தோர். நண்ணிய அடியாரை நிந்தை செய்தோர். நம்பவைத்து நலியச்செய்தோர். கோயில் குளங்களைக் குலைத்தோர். காவிற்பூஞ்செடிகளைக் கலைத்தோர். பசுவைப் பட்டினி போட்டோர். சிசுவைப் பட்டினி செய்தோர். பாவாணரைப் பகைத்தோர். பிராமணரை வதைத்தோர் பசித்தோர்க்கு அன்னங்கொடாதோர். பாதை நடக்க விடாதோர். பொய் கோட்சொல்லிப் பிழைத்தோர். பெண்சோர்வுகாண இழைத்தோர். தீயோர் திருடரைச் சேர்ந்தோர். தெரிந் தோரைக் கண்டெழாதோர். குடும்ப தோஷங்குறித்கோர் குடியரைக் கனவில் நினைத்தோர். கூலியைக் குறைத்து விடுத்தோர். குறைமரக்காலால் கொடுத்தோர். சொல்லி விட்டுச் சோர்வுபட்டோர். மல்லர்ப்பயிரின் மாட்டை

விட்டோர். தாய் தந்தையரை இகழ்ந்தோர். சண்டாளர் தம்மைப் புகழ்ந்தோர். வழக்கில் பக்ஷபாதந்தொடுத்தோர். வாத்தியார் கூலியை எடுத்தோர். கணவற்குத் துன்பம் இழைத்தோர். கவிவாணரைப் பழித்தோர். இப்படி அனேகம் பாதகங்களைச் செய்தோர் ஐயா இவர்கள் என்று உரைப்பார்கள்.

விஞ: இதைக் கேட்டபோது அவ் எமதரும ராஜனுக்கு எப்படி இருக்கும் ஐயா.

விடை: நாராசங்காய்ச்சி நடுச்செவியில் இட்டது போல விழிகள் புருவத்து ஏறச் செவ்வரத்தம் போல சிவந்த அக்னிப் பொறிகள் சிதற, மிகுந்த கோபத்தைக் கொண்டவனுய், அண்டகடாகம் பளீர் என நகைத்துக் கண்டவருடல் உயிர் குபீருரெனப் புகைத்து எண்திசை யமரர் திடீரெனத் திகைத்து, சண்ட அகோரத் திமிளீர் என விடுத்து, பற்களை நெறநெற எனக்கடித்து, சொற் களைப் படபடவெனப் படித்து, நிற்பவர் விட விட வெனத் துடித்து உற்கைகள் பல பல வெனத் தெரித்து மோசம் நினைத்து நேசம் விடுத்து மீசை துடித்துக் சுவாசம் விடுத்து, உதட்டைக் கடித்துக் குதட்டிக் குடித்துக் கைதட்டி திரட்டிப் புரட்டி மிரட்டி மெய்யை நெறித்து உறுத்துச் சரி சரியென வோதை விடுத்து ஹரி ஹரி எனக் காதைப்பிடித்து, இப் பாவிகளைக் கூவிச் சில ஞாயங்கள் கேட்பாரப்பா.

விஞ: அடா, அப்பா இதென்ன பிரமாதமாயிருக்கிறதே கிணறு வெட்டப்போய் பிடி பிடி என்று பூதம் புறப்பட்டாப் போல இவர் கோபத்திற்கும் அவர்கள் பாவத்திற்கும் நேரொத் திருக்கிறதுந் தவிர, இவர்களை பிடித்துக்கொண்டு போகிற போது, புழுத்த நாயும் படாத பாடு பட்டு வந்திருக்கிறவர்

வரையும் சில ஞாயங்கள் கேட்பார் என்பது எதை யொக்கு மென்னில், தாடி பற்றிக்கொண்டு தவிக்கின்ற வேளையில் சுருட்டிற்கு நெருப்பு வேண்டும் சற்று சும்மா இரு அப்பா என்றது போலிருக்கிறது. நல்லது அவ்இயமன் என்னதான் கேட்கிருனய்யா.

**விடை:** அட சண்டாள பாதகரே. இரவும் பகலும் ஓடி யோடித் தேடிய பொற்பணக்குவியல்கள் எங்கே, தூர்ப்பணத் தவிசுகள் எங்கே, பட்டுகள் பெட்டிகள் எங்கே, தட்டுகள் கட்டில்கள் எங்கே, ஆடுகள் மாடுகள் எங்கே, வீடுகள் ஓடுகள் எங்கே, மெத்தைகள் அத்தர்கள் எங்கே, பத்தினி சுத்தமர் எங்கே, பிட்டமுதுய்த்த பிள்ளைகள் எங்கே, கட்டியணைத்த கள்ளிகள் எங்கே, கரிகளெங்கே, நீங்கள் ஏறிய பரிகள் எங்கே, கவிதைகள் எங்கே, நீங்கள் ஏறிய சிவிகைகள் எங்கே, காணிகள் எங்கே நீங்கள் ஏறிய தோணிகள் எங்கே, திண்டுகள் எங்கே, நீங்கள் ஏறிய வண்டிகள் எங்கே, கரிசனமெங்கே, உங்களைச் சுற்றிய பரிசனமெங்கே, அவர்கள் அவைகள் எல்லாம் விட்டு விட்டு, ஏது இவ்விடந்தனியே வந்தது. உங்கள் உள்ளத்துறை உத்தமனை நினைக்க ஒரு நாழியும் ஒழியாத உங்கள் வியாபாரத்தை நாளைக்கு யாவர் நடத்துவர்களடா உங்களையோர் பொருளாக எண்ணிவாசித்த மேலோர்கள் வந்துங்கட்கு நன்மையை போதிக்கவேண்டி யடா க்ரீடா மிருகங்களே.

நெருநலுள னொருவனின்றில்லை யென்னும்
பெருமையுடைத்திவ்வுலகு.

என்றது போல் இப்ரபஞ்சமும் மாயாமயம். இதில் நெடு நாளிருந்து வாழக்கருதிய உங்கள் சரீரமோ ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம், ஓயா நோய்க்கு ஓடுமரக்கலம்.

மாயா விகாரமரண பஞ்சரம், சோற்றுத்துருத்தி நூற்றும் பத்தம், காற்றிற் பறக்குங் கானற்பட்டம், விதிவழித் தருமன் வெட்டுங்கட்டை, சதுமுகப்பாணன் தைக்குஞ் சட்டை, கோட்சரக் கொழுகும் பீற்றற்கோணி. கோபத்தீ மூட்டும் கொல்லன் துருத்தி, நீரிற்குமிழி, நீர்மேலெழுத்து, இத்தை நீங்கள் இனிதென வேண்டாம். உங்கள் செல்வமோ சகடக்கால் போன்றது. அ:தெப்படியெனில்,

"சிறப்புஞ் செல்வமும் பெருமைமுயுடையோர்
அறக்கூழ்சாலே யடையினுமடைகுவர்"

"அறத்திடும் பிச்சை கூவியிரப்போர்
அரசோடிருந்தரசாளினுமாள்வர்"

"குன்றத்தனையிரு நிதியம் படைத்தோர்
அன்றைப்பகலே அழியினும் அழிவர்"

உங்கள் பந்துக்களோ வென்னில், சந்தைக் கூட்டம். இது களையெல்லாம் இனிதென்று எண்ணுது சகல புவன கர்த்தாவை நினைத்து ஐய! நின்னடைக்கலம், அடியனின் அடைக்கலம், துய்ய நின்னடைக்கலம், சுவாமி நின்னடைக்கலம், என்று ஏத்துங்கள் என்று உம் மனையாளும் மக்களும் வாழ்வுந்தனமும் தன்வாசல்மட்டே, வழிக்கேதுதுணை.

தினையாமளவு எள்ளளவாயினும் முன்பு செய்ததவம்
தனையாளவென்றும் பரலோகம் சித்திக்கும் சத்தியமே.

யாதலால்,

"அறிமின்னறநெறி அஞ்சுமின்கூற்றம்
பொறுமின்பிறர்கடுஞ்சொல் போற்றுமின்வஞ்சம்
வெறுமின்வினைதீயார் கேண்மையெஞ்ஞான்றும்
பெறுமின் பெரியோர் வாய்ச்சொல்"

என்று சொல்லிய சான்ருேர்கள் மீது இதுகளையெல்லாம் நீர்கண்டு வந்தீரோ வென்று முடுவல் போல் குரைத்தீர்கள் அன்ருே. இதன்றி,

பாடுபட்டுத்தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரேயனுபவிப்பார்
பாவிகாள் அந்தப்பணம்.

என்ற நல்வழியை மறந்து. கண்கெட்ட மாடென்ன ஓடி இரவலர் மீது காய்ந்து வீழ்ந்திடு மூடரே. நீங்கள் அவ்வுலகிற் சென்று சம்பாதித்து வந்த புண்ணியங்களை ஏதோ காட்டுங்கள் பார்ப்போம். பாவப் பொதிகளைச் சுமந்துவந்த பருத்த வேசரிகளே. பேசுங்கள் என்று அளவிலா நீதிகள் அம்மேலோர்கள் கூறியபோது கேட் டிருந்தும், இவர் பொருளைக் குறித்தே இவ்விளவும் பேசினுர் என்று எண்ணி,

மட்டிகட்கு ஆயிரம் புத்திசொன்னலும் அதின்
மார்க்க மரியாதை வருமோ

என்ற பாட்டையே வாட்டமிலாது நாட்டினீர்களே, பாவ மூட்டைகளே. என்று சீறி, ஆரடா அடா அண்டாண்ட மண்ட பிண்ட கண்ட துண்ட சண்ட ப்ரசண்ட வுத்தண்ட விப்ரசித்த ப்ரதானிகளே? அடா ஆல காலம் போலச் சால நீல கோல கால சூல தூதர்களே. இப்பாவிகள் தாரதம்மியத்திற் கேத்த தண்டணை செய்து அழற் பாதாளத்தில் தள்ளுங்கோள் என்று உத்திரம் கொடுப்பன்.

*வினு: அவ் இயமன் இப்படிக் கொத்த சினங்கொண் டான் என்பதற்கும் இப்படிக்கெல்லாம் வினுவினன் என்ப தற்கும் அவரவர்க்கேத்த ஆக்கினை செய்யச் சொன்னுன்*

என்பதற்கும் தகுந்த உதாரணங்கள் கூறுமற்போவீராயின் உம்மை எளிதில் விடத்தக்க வனல்லேனுகும்.

விடை:

பாடல்

தென்திசை யாளுங் கோமான் திருமுனம் விடுப்பவந்த
வன்றிறலியமன் நோக்கிவாய் மடித்து எயிறு தின்று
கன்றிய வுளத்தனுகி கனல்விழி கொப்பளிப்பத்
தின்று தின்று மிழத்தக்க சினந்தலைக் கொண்டுசீறி.

என்றும்,

தரையிடைப் பிறந்து நீவிர் சாதித்த கருமம் யாது
நிறைய மென்றுள்ள வெல்லாம் நெடிது நாண் மூழ்கத்தக்க
புறைபடு தீயபாவப் பொதிபல தேடிக்கொண்டீர்
கரையுநல்லறஞ் சற்றில்லாக் கலதிகாள் என்செய்தீரோ.

என்றும்,

எனக்கொதித்து அழன்று பொங்கி இடியுமஞ்சுரஉறப்பித்
தினத்துறச் செய்தீங் கெல்லாம் சித்திரகுத்தன் கூற
மனத்திடை யோர்ந்து தண்ட வில் வினையாளர் பாராச்
சினத்திவர்க் குற்றதண்டம் செயுமென வவரும் செய்வார்.

என்றும், சொல்லுகின்றது,

வினு: இப்படி யாரும் பாராத சங்கதி நீர் மாந்திரம் எந்த சாத்திரத்திற் கண்டிருக்கிறீர்.

விடை: ஸ்ரீஸ்கந்த புராணத்து ஓர் பிரிவாகிய சூத சங்கிதையில் இரண்டாவது ஞானயோக காண்டத்தில் ஒன்பதாவது பாவ கரும பலனுரைத்த அத்தியாயத்தில் காண்பதன்றி இன்னும் அனேகம் சான்றோர்கள் உரைத்த நூல்களில் நீயுங்காணலாம்.

வினு: அவ் இயமனுத்தரவைப்பெற்று இவர்களை என்ன செய்வார்கள்.

விடை: நரக பாதாளத்தை நாடிக்கொண்டு போவார்ள்.

வினு: அந்நரகங்கட்குப் பெயர்கள் யாவை?

விடை: அள்ளல், ரௌரவம், கும்பி, பாகம், கூட ஜாலம், ஜெந்துதானம், பூதி, மாபூதி என்ற பகுப்போடு தாமிசிரம், அர்த்தந்தாமிசிரம், கோரரூபம், பயோற்கடம், பதுமகோணம், சண்டம், சண்டகோலாகலம், விகாரனம், சுதீர்க்கம், வர்த்துலம், மகாசண்டம், பீஷணம், ப்ரண்டை' பதுமம், வச்சிரம், திரிகோணம் இவை முதலிய பெயர்களை யுடைய 28 கோடி நரகங்கள்.

வினு: அஃதெப்படிக் கொத்த தன்மையோடிருக்கும்.

விடை: தமப்ரபை, இமப்ரபை, தூமப்ரபை, வாலு கப்ரபை, சாகரப்ரபை, இரத்தப்ரபை, அழற்ப்ரபை இத்தன்மையான ப்ரபைகளை வீசிக்கொண்டிருக்கும்.

வினு: இப்படிக்கொத்ததீயை நாடிக்கோண்டு போகிற மார்க்கத்தில் என்னென்ன செய்வார்கள்.

விடை: கர்த்தாவை நினைந்தழாத கண்ணையுடைய மண்ணைகளே வாருங்கோள் என்று கரங்களோடு கரங் களைப் பிணித்து இழுத்துக்கொண்டுபோய் ஓரிடத்தில் இவருடைய அவயங்களில் எண்ணெய்ச் சீலையைச் சுற்றி எரிப்பார்கள். மற்றோரிடத்தில் அக்கினிக் கட்டிகளை இவன் வாயிலிட்டு இருப்புலக்கையாலிடித்து அறிவுடை

யாரை மதியாத அசடா என்பார்கள். மற்ருேரிடத்தில் செக்கிலிட்டு அரைப்பார்கள் வேருேரிடத்தில் அக்கினி சொலிக்கின்ற எஃகுப் பாவையைப் புணரடா வென்றடித்து அன்னியன் ஸ்திரீயை கமனஞ் செய்தாயடா த்ரோகி என்பார்கள். வேருெரிடத்தில் சடசட பகபக வென எரியாநின்ற அக்கினிஸ் தம்பத்தில் சங்கிலிகளால் இவனைக்கட்டி நெரித்து சிறுவாள் எடுத்து இவன் சரீரத்தைச் சிறுகச் சிறுக வெட்டி அரைப்பலம் காற்பல மாகக் கூறு கூருக அறுத்துப் பருந்திக்கிடுவார்கள். கருணும்பரக் கடவுளை வணங்காத கசடா வென்பார்கள். செகந் நாதனை வணங்காத தலையை உடைப்பார்கள். சச்சிதானந்தனைத்துதியா நாக்கைத் துணிப்பார்கள். நிராமயனை நினையாத நெஞ்சைப் பிளப்பார்கள். ஜென ரக்ஷகன் கதைகேளாச்செவிகளில் சிவந்த சிலாக்குகளால் குத்தித் திருப்பியுறுக்தி முறுக்கி அடா பரமத்ரோஹியே. பாதகா அனுத ரக்ஷகனுய் ஆபத்பாந்தவனுய் பரமசாதுவாய் கண்டா கண்டனு அரூபியா அக்ஷயனுய் பரம தயாளுவாய் ஆதிமத்ய அந்த ரஹிதனுய் விளங்கானின்ற ஒப்பிலா எங்களப்பனுகிய அக்கடவுளானவர் இல்லவே இல்லை என்றும் பாவ மேது புண்ணியமேதென்றும் செத்தபின் செய்வதை யாரறிந்து வந்து சொன்னுர்கள் என்றும், பெரியோர்கள் என்னும் கள்ளப் பசங்கள் உள்ளதல்லாத பழுது வார்த்தைகள் எழுதி வைத்தார்கள் என்றும், சொல்லி அளவிலாக் கொடுமைகளைச் செய்த பாபேஷ்டி வாடா என்று கோடாகோடி அடிகள் அடித்து அட்டை, அரணை, தேள், பாம்பு, குளவி, நரி, நாய், பேய், பூதம் இவைகளெல்லாம் சுற்றிக்கொண்டு அனேகங் காதமகலம் நிகளம் ஆழத்தை உடையதாயுமிருக்கின்ற கிடு

கிடென்னும் அழற் பாதாளததில் இவன் பிடரியைப் பிடித்து இழுத்துத் தள்ளுவார்கள்.

விஞ: இதற்கு மேற்கோள் யாது.

விடை

பாடல்

கரையினிறுத்தி யயத்தினுலக்கை கொடுசென்னீ
ருரைகள் தெறித்தெழ என்புநுணுங்க வுரத்தினிடித்திடுவார்
மிரைநிரையத்தலை கைகள் கிழக்குறமேலடி கோணவிருப்
புரைதரமாட்டி அடுத்தழன் மூட்டியுயங்க வறுத்திடுவார்

முள்ளுறுதண்டமுயர்த்தி யுரப்பிமுடிக்கண டித்திடுவார்
என்ஞபுகுறியினை நாய்பலகவ்வி இழுக்கவிடுத்திடுவார்
வள்ளுகிர்வேங்கைகள் பாய்ந்துடல்கீறி வருத்தநிறுத்திடுவார்
அள்ளுகுழம்பு மலக்கிருமிக்குள் அழுந்தஅடித்திடுவார்

கூறுபடுத்திமெய் சாடிநெய்விட்டழல் கொளுத்துவர் சிற்சிலரை
பாறுமுதற்பல புட்டசைகொத்திட பண்ணுவர் சிற்சிலரை
நாறுமுடற்றசைவாள் கொடுகொய்து நசுப்பர்கள் சிற்சிலரை
வேறுபடத்துணி செய்துடல்கும்பி விழுந்தவர் சிற்சிலரை

உருக்கிய செப்புறுநீர் நனிவாய்வழி யூற்றியுடற்றிடுவார்
முருக்கிநெடுஞ் சிவிறிப்புனல் வங்கமுகத்தில் விடுத்திடுவார்
தருக்கியழற்கணி றுத்தசியைக் கொடுதாரைகள் குன்றிடுவார்
நெருக்கியிழுத்து நெருக்கி வயிற்றுறை யீரருளீர்ந்திடுவார்

என்று சூதசம்ஹிதையிலும்,

கொடியவெம்பாவத் தோரைக்கூறு கூருகவாள்கொண்டு
அடிமுதல்முடியீராக அரிந்துமாரழலி லிட்டுங்
கடியபாம்பட்டை செந்தேள்கைம் மிகும்குழியிற் சேர்த்தும்
இடியெனத்தழலில் காயும்இருப்புத்தா ணேடுசேர்த்தும்

என்று மெஞ்ஞான விளக்கத்திலும், இன்னும் அனேக நூல்களிலும் இருக்கின்றன.

வினு: அக்குழியில் விழுந்தவுடன் அங் குண்டாகும் துன்பம் யாது.

விடை: குபீரெனப் பாதம் அத்தம் காந்தம் பற்றிக் கொண்டு அலறும் சமயத்தில், கழுகுகள் மோதிக் கண்ணைப் பிடுங்கக் கொடுவரி நரிகள் இவன் குடரைப் பிடுங்க நாய்கள் எழுந்திவன் நாக்கைப் பிடுங்க, பேய்கள் எழுந்திவன் பிடரியை மோத தேளெறும்பு குளவி செவி களைத் துளைக்க அக்கினி பற்றிவன் அங்கம் எரிக்க வயிற்றும் வாயினும் கண்ணினும் செவியினும் வச்சிரப் புழுக்கள் புழுத்து நெளித்துக் களைக்க, வருத்தும் போது, அந்தோ! அய்யோ! அப்பா! என்று அலறி எமபடானை அழைத்து அடியேனை எடுத்துப் பூலோகத்துக் கனுப்புங் கோள் உருட்டினும் பிரட்டினும் திருட்டினும் உரட்டினும் சூதினும் வாதினும் ஏழைக் குடியைப் பாழாக்கி பாசத் தினல் ராகத்வேஷத்தினல், கபடவேஷத்தினல், துஷ்ட நேசத்தினல், ஈசனைப் பரவாசனை பூசனை செய்யாத நீசஞகிய தோஷி நான் சூசனை யறியாது சம்பாதித்த காசு பணத்தை பெரியோருக்கு வேண்டியமட்டும் கொடுத்துத் தாண்டி வருகிறேன். விடுங்கள் என்று துள்ளத் தடங்கல் செய்தவர்கள் தள்ள அக்குழியிற் கிடப்பன்.

வினு: இதற்கு மேற்கோள் யாது.

விடை:

பாடல்

என்றுமிறவோம் என்றிருந்தோம் இறந்துபடுவ தீதறிந்தால்
அன்றுபடைத்த பொருளையன்றே யருள்வோம் அடியார்க்கென்பர்
சிலர்

சென்றுவரவாங் கெம்மையின்னும் செலுத்திப் புதைத்ததிரவி
யத்தை
ஒன்றுமொழியாதறம் புரிந்திங்கு ஓடிவருவேம் என்பர்சிலர்

என்று இப்படி மெய்ஞ்ஞான விளக்கத்தினும்,

புழுக்கள்துளைக்கப் படுவேமோ புலிகள்கடிக்கக் கெடுவேமோ
கழுக்கள்பிடுங்க விழுவேமோகனலி லொடுங்கி அழுவேமோ
வழுக்குநரகிலுளைப்பேமோ வனப்பேயடிக்கக் களைப்பேமோ
விழுக்கிலுழைத்து வைத்தபொருள் எல்லாமளிப்பேம் எடுங்க
ளென்பார்

என்றோர் உத்தமப்பாவினும், சொல்லியிருக்கின்றது.

*வினு: பிறகு இவன் என்னநினைத்து பிதற்றுகின்றான் ஐயா.*

விடை: அடாமைந்தா, மனை சுற்றத்தாரே. ஆரா நரகத்தீக்கு வேராம் விரகைப்போல் என்னங்கம் எரிய நின்று பங்கப்படுகின்றேனே, இப்போது யாராவது வந்து என்னைச் சீராக்க வல்லீரோ என்றழுங்கிக் கடவுளில்லை கதியுமில்லை யென்ற கசடர்களே புண்ணிய பூமியில்லை பெரியோரில்லை யென்ற புல்லர்களே முறையுமில்லை மோக்ஷமுமில்லை என்ற மூடர்களே கல்வியுமில்லை காருண்யமுமில்லை என்ற கர்த்தபங்களே சத்தியமுமில்லை சௌசமுமில்லை என்ற சண்டாளர்களே பங்காளி என்றும் பந்துக்கள் என்றும் பறித்துத் தின்ற பாவிகளே இச் சமயத்தில் வந்து யாரேனும் காக்க வல்லீரோ உங்களை நம்பிக்கண்ட சுகம் இது தானோ என்று கதறுவான்.

*வினு: இதற்கு மேற்கோளுண்டோ*

விடை: உண்டு.

வினு: அஃதெப்படி

விடை:

பாடல்

பெண்டீர்மக்கள் கிளைஞரிவர் பின்னுக்குதவி யென்றெண்ணி
கண்டீரறத்தை விட்டவரால் கடன்பட்டிறந்தோம் என்பர்சிலர்
உண்டீருடுத்தீர் சுற்றத்தீர் உற்றவேளைக்கொரு வரும்வந்
தண்டீரந்தோ உம்மைநம்பியான திதுவோயென்பர் சிலர்.

தேடிப்பொருளைச் சிறுதொழிற்கே செலுத்தியுணர்ச்சி தெரியாமல்
பாடிப்பதருக்கிறைத்த தெல்லாம் பலித்ததெமக்கீங்கென்பர் சிலர்
கேடிப்படிவந்தெமைச்சூழக் கெடுத்த பாவிஉலகிலின்னம்
நாடிப்பறக்கவிடினு மங்ஙன் நாடோம் என்றும் சிலர் சொல்வார்.

என்று பிரபோத சந்த்ரோதயத்தினிலும்.

பக்தர்கள்உரைத்த பணிகளைவெறுத்துப் பாவிகள் தீமொழிதரித்தே
யத்தனையொரு நாழிகையுமெண்ணுமல் அலைந்தலைந்தழி
பொருளீட்டி
வைத்துவிட்டங்கு வந்துயாமிங்கு வாதனைப்படமுடிந்திலையே
எத்தனைநாளோ இக்குழிகிடப்பது என்செய்வோம் ஏழைகள்
அந்தோ.

என்று, ஓர் உத்தமப்பாவினும். இன்னும் அனேக சாஸ்த்ரங்களினும் சொல்லியிருக்கின்றதுந்தவிர புராண ரத்தின மாகிய பாகவதத்தில் முப்பதா மத்தியாயத்தில் தேவவூதியாருக்குக் கபில முனிவரால் நரகாதி பிரபாவ தண்டனைகள் விரிவாய்ச் சொல்லுகின்றது. முன் சொல்லிய செய்கைகளெல்லாம் பாதகம் என்றே பாரதம் துரோண பருவத்தில் பதின்மூன்ரும் நாள் இரவில் துரொளபதையாலும் கம்பராமாயணம் அயோத்தியா காண்டத்தில் பரதாழ்வானும் சொல்லியதன்றி வேதாகம

புராண இதிகாச கீதாசம்ஹிதைகளிலும் சொல்லி யிருக்கிறது.

வினு: முன்னரகிற் கிடந்தவன் என்னகதி அடை கிருன் ஐயா.

விடை: இப்படி அலறி அழுது ஒருவரும் வந்து உதவி செய்யாதபடியினுல், தன்னைத் தானே நிந்தித்துச் சிந்தித்துச் சீறி மீறி எறிந்து கரிந்து முதிர்ந்த கோபத் தீயோடு நரகத்தீக்கு எரிதுரும்பாய் அனேக காலம் கிடந்து மறுபடியும் ஜனனுதி பவத் துன்பங்களை விதியின்படி இயமன் கட்டளை கொண்டு அடங்கிக்கிடப்பன்.

வினு: பூர்வத்தில் செய்த பாவத்திற்காக நரகத்தில் கிடக்கின்ற உயிர்கள் மறுபடிசெய்த பாவகன்மத்தால், மானிடதிரியக்காதி சரீரங்கள் எடுக்கிறதோ அதைச் சொல்ல வேண்டும்.

விடை: சீவர்கள் எப்போதும் எண்ணிறந்த ராகத்வேஷ சங்கற்ப சகிதர்கள் ஆதலால் சனனம் எடுக்குந்தோறும் முடிவிலா ஆகாமிய கன்மத்தை சஞ்சி தத்தில் சேர்த்துக் கொண்டே வருகிருர்கள். இதன்றி, நரகாதி துக்கானுபவம் செய்து. நீக்கிக்கொள்ளத் தக்க ஒருவித பாவம் மாத்திரம் செய்திருக்கமாட்டார்கள். அதனுலேயே அனேகம் வேறுபாடான சரீரமெடுத்துத் தங்கள் தங்கட்குரிய பிராப்த கன்மங்களைத் புசித்து உழைத்துக் கொண்டே வருகிர்கள் என்றுணர்வாயாக.

வினு: ஆத்மாக்கள் அவரவர்கள் செய்த கன்மாதுப வத்துக் கேற்கவே சரீர துக்கங்கள் உண்டாகுமாயின் மிகவும் கருணையோடு கடவுள் நம்மை ஆண்டு ரக்ஷிக்கிருர் என்று நீர் சொல்லியதற்கு ஒருவித வழியும் காணேமே.

விடை: ஆஹா, ஹா இப்போது விஞவின சங்கைக்கு தகுந்த உத்தரம் சொல்லுவேன் கேளும், ஆத்மாக்கள் கிஞ்சித் ஜ்ஞத்வ சிற் சடபேதர்களாவர்கள் அனுபவித்தொழிக்கத்தக்க அஞதிகன்மமானதே சட பூர்ணம். இவர்களும் கன்மத்தை யுணர்ந்து புசித்தொழிக்கமாட்டார்கள். அக்கன்மமும் இவர்களை உணர்ந்து ஊட்டுவிக்காது. ஆகையால், இவ்விரண்டின் தன்மையை உணர்ந்த எமது ஆண்டவஞே நிர்விகார நித்தியானந்த சர்வாத்ம பரிபூர்ண சர்வக்ஞத்வன் அவரவர்கள் கால கன்மத்தை யறிந்து விஷய ஞாஞஞானங்களையும் கொடுத்து ஆக்கல் அளித்தல் போக்கலை யுடையவஞய், திரோபவ அனுக்ரகம் செய்து வருவன் என்று உணர்வாயாக.

விஞ: மூன் நரகிற்கிடக்கும் ஆன்மா மானிடதேகம் எடுக்கும் விதம் எப்படி ஐயா.

விடை: பாபோத்க்ருஷ்டத்தாற்கிடைத்த தாமச மாகிய நரகத்தில் கிடக்குங்காலத்து ராஜசமாகிய மானிட தேகம் எடுக்க வேண்டிய பிரகரணமிருந்தால், யாதஞ சரீரத்தினின்று நீங்கி நரகானுபவ சேஷமும் புண்ணிய சாமான்யத்தையும் பொருந்தி ஈச்வரஞல், பிரவர்த்திக்கப் படானின்ற புருஷனுடைய வீர்யமாகிற பிந்துவை சூக்மாகாரமாய் கலந்தாசரித்திருக்கும் என்றுணர்வாயாக.

விஞ: இப்படியான ஜீவஞனது எத்தனை மாதம் தகப்பனிடத்தில் தங்கியிருக்குமையா.

விடை: இரண்டுமாதம் தங்கியிருக்கும்.

வினு: இப்படி இரண்டு மாதம் புருஷனும் பிள்ளையைச் சுமக்கிறுன் என்று எந்தச்சாஸ்திரத்திற் சொல்லியிருக்கின்றது.

விடை: அனேகங்களில் சொல்லியிருக்கின்றது.

வினு: அனேக நூல்களில் சொல்லியிருந்த போதிலும் சுருக்கமாய் இரண்டொரு சாஸ்த்ரத்தில் இருப்பதை விவரமா யெடுத்து உதாகரிக்க விரும்புகிறேன்.

விடை: ஐந்தாம் வேதமாகிய மகாபாரதம் ஆரண்ய பர்வத்தில், தர்மராஜனுக்கு மார்க்கண்டேய மகாமுனிவர் திருவாய் மலர்ந்திருப்பதன்றி, ஸ்ரீமத் பாகவத புராணம் த்ரிதீய ஸ்கந்தத்தில் ஸ்வாயம்பு மனு புத்திரியாகியும் கர்த்தப் ப்ரஜாபதியின் பத்தினியாகிய கபில முனிவர் சொல்லிய ப்ரசினத்தில் புருஷனுடைய வீரியமாகிற பிந்துவை ஆசரித்திருந்து ஜீவனுனது ஸ்த்ரீகர்ப்பத்தில் ஆவிர்ப்பவிக்கிறதென்று சொல்லியிருக்கிருர்.

வினு: பிதாவினிடமாய்ப் பரிணமித்த ஆத்மாவானது மாதவின் கர்ப்பத்தில் எப்படி அடைகிறது.

விடை: பூர்வகர்மம் சஞ்சிதவோரையின்படி ஸ்த்ரீ யானவள் கைவிலக்கம் என்கிற பூப்படைந்த நாலாம் நாள் முதல் அம்மாதாவின் குக்ஷியிலுள்ள ஜராயு வென்கிற கருப்பாசயப் பையினது கபாடத்வாரா ஸ்திரீ புருஷ சங்கம மூலமாய் எழாநின்ற சுக்கிலத்தோடு புறப்பட்டு சிவந்த வர்ணத்தை யுடைய சுரோணிதத்தோடு கலந்து பையினிடத்துத் தங்கியிருக்கும் என்றறிவாய்.

வினு: பிறகு நாளுக்குநாள் அக்கருவானது எப்படி விர்த்தியடைந்து வருகிறது. அதையுணர்த்த வேண்டியது.

விடை: பிரதமதினத்தில், நீரில் மிதக்கும். தயிலத் திவலை போலும், இரண்டாம் நாளில் குண்டுமணி போலும், நான்காநாளில் நீர்க்குமிழிபோலும், பத்தாநாளில் இலந் தைக்கனி போலும், பதின்மூன்றும்நாளில் ஜம்பீரம்பழம் போலும், பதினைந்தாநாளில் கடினமில்லாத பிண்டம் போலும், மாதம் ஒன்றுயின் மாம்ச பிண்டம் போலும் இருக்கும். இரண்டாம் மாதம் சிரசைக்குறிக்கும். மூன்றும் மாதம் காலிரண்டு கையிரண்டு சிரமொன்று மாகிய ஐந்து உருப்புக்களையும் பிரித்துக்காட்டும். நான்கா மாதம் விரல்களும், நகங்களும், வயிறும், உரோமங்களும் அஸ்திகளும் கண் காது முதலிய சந்துக்களும் செவ்வை யாகத் தோன்றும். ஆறும் மாதத்தில் இந்திரிய பஞ்ச கங்களும் பிரகாசமாய் நின்றவையடையும். ஏழாமாதத்தில் ஜீவசையோகம் பூரணமாகும். எட்டாம் மாதத்தில் தனு கரணேந்த்ரியங்கள் எல்லாம் சம்பூர்ணமடையும்.

வினு: இப்படி குறைவற்ற அவயங்களையுடைய அச்சி சுவானது வயிற்றை விட்டு வெளியில் வராதிருப்பதற்கு ஏதுவென்ன.

விடை: முழுதும் நிறைவடைந்த போதிலும் அக் குழவியினது உடல் மிகவும் மிருதுவாகிக் குழந்தை இளந் தளிர் போன்றிருப்பதால், ப்ரசூத வாயுவானது மோதி முறித்து அதோ முகமாகத் தள்ளும்போது சஹியாது பின்னமடையும் என்று மற்றிரண்டு மாதமும் இருந்து முதிர்ந்து வரும்படி எனது ஆண்டவனது கட்டளையென்று உணர்வாயாக.

வினு: அப்படியாயின் மற்ற ஒன்பது பத்து மாதமும் ஜீவனுனது. யாருடைய உதவியால், எவ்வித ஆகாரத்தைப் புசித்து வளர்ந்துகொண்டிருக்கும்.

விடை: தாயானவள் உண்ணப்பட்ட அன்னபானுதி அறுசுவை ரசங்களும் சகல ஜீவ தயா பரனுகிய எமதைய னது செயலினுல் தன்னுந்தியின் வழியாக வருவதைப் புசித்து விர்த்தியடையும் என்றறிவாயாக.

வினு: அவ்விடத்துச் சிசுவானது சுகத்தோடிருக்குமா அல்லது துக்கத்தோடிருக்குமா.

விடை: ஒன்பதாம் மாதம் முதல் பூர்வஞானமுடைய தாய் பெண்ணுருவாயின் தாயினது இடது பக்கத்திலும், புருஷ உருவாயின் வலது பக்கத்திலும் இருந்துக்கொண்டு சஹிக்கக்கூடாத வருத்தத்துடன் எப்பொருட்கும் இறை வனுகிய என்னப்பனே நினைத்து அழுது தோத்திரம் செய் திருக்கும் என்று தெரிந்துகொள்.

வினு: அதற்கு அவ்விடத்து உண்டாகும் இன்ன லேயும் அதனுற் சகியாது கடவுளே நினைந்து புலம்பிக் கேட்டுக்கொள்ளும் விண்ணப்பத்தையும் சொல்லும்படி பிரார்த்திக்கிறேன்.

விடை: ஜராயு வென்கிற பையானது உருத்த முதுகையும் உடலேயும் சுருக்கிச் சக்கராகாரமாக வளைந்து, பூரித்திருக்கின்ற உதிர ஜலத்தில் சயனித்துக்கொண்டு மூச்சுவிடக்கூடாமல் சுழன்று கொண்டு அப் பையின்மேற் புறத்தில் குடல்களால் சுற்றிக் கட்டப்பட்டு சற்றேனும் சலன மற்றிருப்பதால், ப்ரம்மித்து ஒருபுறத்தில் எண் ணிறந்த புழுக்களானவை தனது மிருதுவான சரீரத்தைக் கடிக்கவும், தாயானவள் உண்ணப்பட்ட, உப்பு காரம் துவர்ப்பு புளிப்பு சுடுகை இவை அவையவங்களில் தாக்கப் பட்டு எலும்புகளால் உறுத்தப்பட்டு தாயானவர் ஓடல்

நடத்தல் இருத்தல் கிடத்தல் படுத்தல் இம்மல் காரல் கதுமல் இவற்ருல் வருந்தி ஜாடராக்கினியால் தகிக்கப்பட்டு, மூர்ச்சித்து, இப்படி அடிக்கடி படுகின்ற வருத்தத்திஞல், பூர்வஜன்மங்களில் செய்த கர்மங்களை நினைந்து நடுநடுங்கி எம்பெருமானை தியானிக்கின்றது. ஓ ஷட்குண பரிபூரண தயாபரஞகிய ரக்ஷகா ! உபாதி சூனியராகியும் அந்தராத்மாவாயும் கர்மபாச பிந்து யோனி சம்பந்த ரகிதராயும், தேசகாலவஸ்து பரிச்சேத ரஹிதராயும், அளவிலாத மகிமையை உடையவராயும், ப்ரக்ருதி புருஷாளுக்கு உபகாரராகியும், இருக்கிற ஓ பரம புருஷா இதோ உன் திருவடிகளுக்கு ப்ரணும்மம் பண்ணுகிறேன். ஓ பக்த ரக்ஷகா! ஓ கருணைப்தி தீனதயாளா! பஞ்சபூதங்களாலே நிர்மிக்கப்பட்ட சரீரத்திலே இந்த்ரியங்கள கரணங்கள் விஷயங்கள் இதுகளை ஸ்வரூபமாக உடைய ஞான சூன்யஞகிய நான் அப்படிக்கொத்த சரீரமில்லா பகவாஞகிய நின்பொருட்டு அனேக கோடாகோடி தண்டன் சமர்ப்பிக்கிறேன். ஸ்வாமி இந்த மாதாவின் வயிற்றில் துர்க்கந்தமாகிய மலமூத்ராதி கிருமிகள் நிறைந்த பையினிடத்து நின்னை மதியாத துஷ்டஞகிய என் அபசாரத்தால் அடைத்தனையன்ரே? வாரீர் ப்ரபுவான சமானமில்லாத செயலையுடைய ஜெகதீசா! இந்த கஷ்டத்தினின்றும், பாபியாகிற என்னை திரஸ்கரியாது எப்போது வெளியில் இழுத்துவிடப் போகிருயோ ஒரு கடிகை நேரம் அனேக யுகமாகிறது அன்ரே. தேவதேவராகிற தமது திவ்விய சரணும்புஜங்கட்கு முழு மனதோடு அஞ்சலி பந்தத்தன்றி என்ன உபகாரம் செய்யப் போகிறேன. இதை அங்கீகரிக்கக கடவீர். சுவாமீ இந்த கர்ப்பத்தினின்றும் பாழுங் கிணற்றிற்கு சமானமாகிய மாயா சம்பந்த வெளியில்

புறப்படுகைக்கு எட்டுணையேனும் இச்சிக்கிறேனில்லை. ஆயினும், இப்போதுண்டாயிருக்கிற ப்ராந்தியாகிற க்ரந்தியில்லாத சகாய ரூபமான ஞான புத்தியினலே இந்த பரமாத்மாவை த்ரிஸ்யவிஷய சாக்ஷாத்காரபந்த சங்கார சக்ரத்தினின்றும் சீக்கிரமாக உத்தாரணம் பண்ணுகிறேன் என்று இப்படி நைச்சிய ஸ்தௌத்தியம் செய்யுங்காலத்து கர்த்தனருளால் உண்டாகும் ப்ரசூத வாயுவானது தசமாசமான அந்தக்ஷணத்தில் மோதி முறித்து நெறித்து தலை கீழாக விழும்படி சிறு துளையினின்றும் கம்பியிழுப்பது போலும், ஆலையின்கண் அரைப்புண்ட கன்னல் சக்கை போலும், நெருக்குண்டு இப்பூமியிடத்து விழுந்தவுடன் பூர்வஞானம் கலங்கிப்போய் மூர்ச்சித்து இரத்தந்தோய்ந்து அமேத்தியத்தில் புழுவைப்போல பதைபதைத்து மாயையின்கண் கட்டுண்ட விபரீத புத்தியை அடைந்து அலறி 'ங்கா' என்கிற சப்தத்தோடு ரோதனம் செய்து கொண்டிருக்கும்.

வினு: இப்போது சொல்லியவைகளுக்கெல்லாம் மேற்கோள் எடுத்துரைக்க வேண்டுகிறேன்.

விடை:

பாடல்

ஓடதிதருக்கள் புனலினுலுளவா முண்டியிலூறிய சாரம்
நீடுசுக்கில சோணிதங்களா மவைதாநேரிழையா ரொடுமாந்தர்
கூடியகலவிதனில் விளைந்தந்த கோதையர்காப்பகோள கையின்
ஊடுறத்தரித்து முந்தியதினத்தினுதக நுண்டுளி யெனவுறையும்

திங்களோர்நாலில் சகனமுண்டாகித்
திறம்பெறுமாத மோரைந்தில்
தங்குபின்மணியா மாறுமாதத்தில்
தடங்கண்மூக்குச் செவிதழைக்கும்

பொங்கிய ஏழாந்திங்களில்சிவன்
பொருந்தும் எட்டானமாதத்தில்
அங்கவயவமொன்றுமே குறைவற்
றடைவுடன் பூரணமாகும்.

மாதமொன்பதனிற் குழவியாய்த்தொல்லை
மரணமும் ஜனனமும் தெளிந்திட்டு
ஓதருந்துன்பமுழந்து நீர்கர்ப்ப
உபனிடமுரைத்த சொற்படியே

பூதலந்தன்னில் இனிப்பிறவாமல்
போற்றுதிமுகுந்தனேயென்ன
தீதறுமவன்றன் மூலமந்திரத்தைத்தியானமே
செய்துகொண்டிருக்கும்

என்று 'அரிதாஸர்' திருவாய் மலர்ந்தருளிய இருசமய விளக்கத்திலும்.

மதியமொன்றிற் கடினமாமதிய மிரண்டிற் சிரமுண்டாம்
மதியமூன்றிற்பாதங்கள் மதியநான்கில் விரலுதிரம்
மதிசெய்கடியுமுண்டாமை மதியின்முதுகோடிருபக்கம்
மதியாறினிற்கண் செவிநாசிமதியேழ் ஜீவசையோகம்,

எட்டாமதியிலிலக்கங்க ளெல்லாநிரம்பியுந்திவழி
மட்டார்குழற்றுயுணவிரத மருவநுகர்ந்து வளர்போது
முட்டாமுன்னேப் பவநிகழ்ச்சி முனேயக்கொடிய நிரயத்துப்
பட்டாழ்பவரின்னிவருந்திப் பாங்குபெற இன்னனநினேயும்.

அளவில்யோனிகளிற் பிறந்தரம் அளவில்கரும பலனுகர்ந்தாம்
அளவில்பேருருற்றிருந்தாம் அளவில்துன்பமனு பவித்தாம்
அளவில்பவநீங்குறு முயற்சியாதும் புரிநதாம்மலம் பிறந்து
அளவிலளவின் மறைமுடிக்கும் அப்பாலானேயளவிலியை.

குரவனருளின் மறையுண்மை கொளுத்தக்கொண்டு நித்தியமும்
பரவுநைமித்தியமும் விதிப்படியே புரிந்துமோகாதி
புரவுகெடநல்வைராகமுற்று நிட்காமியம் புரிந்து
விரவுமுண்மை ஞானத்தின்மேலா முத்தியடைந்திடுவாம்.

என்றுநினைத்துக் கொண்டிருக்கும் எறுழாலேயின் மென்கரும்பே
|போல்
ஒன்றும்யோனியிடை நெருக்குண்டுயங்கி வெளியின் வருமோகந்
துன்றுவளிவந்தாங் கடிப்பச்சுழன்றுமுன்னை நினைப்பெல்லாம்
சென்றுகழியாமறந்து விடும்தீராதாயஞ் ஞானமுறும்.

என்று சூதசங்கிதையில் சொல்லியிருக்கிறது.

வினு: இப்படி உற்பவிக்கிற ஆத்மாக்களை உறுப்புகள் குறைவாகவும், எந்த எந்த பாவ பரிபாகத்திலைலே ஆகிறார்களோ அதுகளை சங்க்ரகமாகத் தெரிவித்து என்னை ஆட்கொள்ள விரும்புகின்றேன்.

விடை: அதுகளைச் சொல்லவேண்டுமாயின் அவர்கள் அனுபவிக்கும் கன்மமானது ஒவ்வொன்றுமே அளவிறந்த வேறுபாடுடையது. அவை முற்றும் ஆராய்ந்து உரைக்கின், இந்நூற்குரிய அளவின்றிப் பெருகுமாதலால், சிறுபான்மை விசேஷமாகியவற்றை எடுத்துணர்த்துவதைக் கவனமாய்க் கேட்பாயாக.

உயர்வாகிய பிராமணர்களை வைது அடித்தவர்களும், அடிமையை யுதைத்தவர்களும், க்ஷயரோகம் அடைவார்கள். பெரியோர்களை மதியாமல் நிந்தை செய்தவர்களுக்கும், வீடு முதலியவற்றில் நெருப்பையிட்டவர்களுக்கும், பிராமணர்களைக் கொன்றவர்களுக்கும், அவயவங்கள் அழுகும்படியான குஷ்டவியாதியை யுடையவர்களாய் ஜென்மாந்தரத்தில் சண்டாள மிருக பக்ஷி யோனிகளில் ஜனித்து உழல்வார்கள். ஆசாரியன் மனைவியை இச்சித்தவர்கள். பிராமணர் பொருள் பூமியைக் கவர்ந்தவர்கள். வேதாகம புராணங்களைக் குற்றஞ்சொன்னவர்கள் சற்சீடன் பணிவிடைகளையும் தர்மங்களையும்

பழித்தழித்தவர்கள் அளவில்லாத வியாதி சம்பந்திகளாயு ழன்று. கொடுமையையுடைய சண்டாள ராக்ஷஸ பைசா சங்களாய் எண்ணிறந்த பவத்து அழுந்துவார்கள். ஆசாரியன் மனம் நோக அவமானம் செய்தவர்களும் பெரியோர்முன் அடக்கமில்லாது பிதற்றினவர்களும் வெறிபிடித்து மலமுதலியவைகளைப் புசித்து அவமானப் பட்டு உழல்வார்கள். பெரியோர்களைக்கண்டு ஏழாமலும், வணங்காமலும், நின்றவர்கள் கடா கழுதையாவார்கள். ஆசாரியர் பெரியோர்களுக்குச் செய்யவேண்டிய அடிமைத்தொழில் செய்யாதவர்களுக்கு மந்தபுத்தி யுண்டாகும். அவர் கோபித்ததற்கு எதிராக தாங்களும் கோபிப்பார்களாகில் சிரநோயுண்டாகும். அவர்களைக் கண்டிக்க நினைப்பார்களாகில், கைகால் முடங்கி கண் ணுங் காதுங் கெட்டு துன்பப்படுவார்கள். கற்புள்ள தன் மனைவியை நிந்தித்தவர்கள் கண்ணினின்றும் நீர்வடியும் நோயை யடைவார்கள். மனைவியிருக்கப் பரத்தையருக்கு ஆபரணமணிந்து மகிழ்ந்தவர்களுக்கும் பலபேருடன் பொசிக்கும்போது தம் பாழும் வயிற்றிற்கே நல்ல பதார்த் தங்களை வைத்து உண்டவர்களுக்கும், கண்டமாலை யுண்டாகும். பசித்தவரிருக்க புசித்தவர்களுக்கும், தனது உத்தமஸ்தீரீக்கு போகத்தைக் கொடாது வேசையைப் புணர்ந்தவர்களுக்கும் மேகவியாதி உண்டாகி இறந்து அலியாய்ப் பிறப்பார்கள். ஒருவன் கற்புள்ள மனைவியை இச்சித்தவர்களுக்கு யாருங்கண்டு நகைக்கும்படி விதை பருத்து வாதநோய் மூத்திரச்சுருக்கு அலர்ஜன்னி இவை களைக்கொண்டு களைப்பார்கள். அப்படிக்கொத்த புண்ணி யவதி குருபத்தினி, தாய், தமக்கை, தங்கை முதலிய முறையற்ற ஸ்த்ரீகளைப் புணர்ந்தவர்கள் தீராத வெள்ளை

அங்க வீக்கம் க்ஷயரோகம் குஷ்டம் இவற்றைக்கொண்டு கோசங்கள் அழுகிப் புழுபுழுத்து மகத்தாகிய துக்கானுபவி களாய் இறந்து ஜன்மாந்திரத்தில் நாய் கழுதை பன்றி முதலான சரீரங்கள் எடுப்பார்கள். சகோதரன் தமயனி வர்கள் மனைவியை யிச்சித்தவர்களுக்கு ரத்த பித்த ரத்த காசம் இவையுண்டாகும். குருநிந்தை செய்தவர்களும், பசுவைக்கொன்றவர்களும் பிறக்கும் பொழுதே குருடாய் வருவார்கள். அதனோடு மேகவாயுவையும் அடைவார்கள். சிசுவைக் கொனறவர்களுக்கு குன்மவியாதியுண்டாகும். சகோதரத்ரோகம் மித்திரத்ரோகம் செய்தவர்களுக்கு மூல வியாதி சிரவியாதி நேத்திரவியாதி யுண்டாகும். விசுவாச பாதகர்களுக்கு கண்டமாலை காசம் மார்நோய் இவை உண்டாகும். பொன் திருடினவர்களுக்கு முகத்தினும் நகத்தினும் வியாதியுண்டாகும். யதிநிந்தை செய்தவர் களுக்கு உதிரவியாதியுண்டாகும். தனக்கு மேலான நல்லவர்களுக்கு மன ஒருமையோடு வந்தனம் செய்யாத வர்களுக்கு கன்னத்தில் நோயுண்டாகும். தாய் தகப்பன் சுற்றத்தார் அதிதிகள், இவர்கள் பசிக்கப் புசித்தவர்கள். தரித்திரர்களாய் வயிற்றெறிச்சல் மார்நடுங்கும் நோய் குலையெரிச்சல் வயிற்றுநோய் அனுபவித்துப் பன்றியாகப் பிறப்பார்கள். முன்னிருந்த அறிவையுடையவர்கள் நிய மங்களை விலக்கி அவரால் நிஷேதித்தவற்றைச் செய்த வர்கள் பொய் சாக்ஷி கூறினவர்கள் அவருக்குச் சகாயம் செய்தவர்கள் தேகங்களில் தீராத நிணங்களுண்டாய் அதிற்கிருமிகள் கிண்டப்படுவார்கள். அன்னம் இடுவே னென்று சொல்லிப் பொய்த்தவரும், ஆசையோடெடுத்து விரதத்தை விட்டவரும், பொதுக்காரியத்துக்கு விரோதம் செய்தவரும், கொடுப்பதை விலக்கினவரும் பித்த வியாதி

யுடையவர்களாய் இறந்துபோய் சண்டாளராக தேக மெடுத்து அலைந்து நரகத்திற் புழுவாகப் பிறப்பார்கள். புண்ணிய கதைகளை வாசிக்கும் போதெல்லாம் குதர்க்கம் செய்தவர்களுக்கு நாசிரோக முண்டாகும், அக் கதைகளை வாசிக்கக்கூடாதென்றும், கேழ்க்கலாகதென்றும், சொல்லிப் போனவர்கள் செவிடாகியும் ஊமையாகியும் போவார்கள். வாலகில்லியர் இளைய திருவடி இவர் களுருவத்தைக்கண்டு உல்லங்கனம் செய்து சகல வளங் களையும் இழந்ததற்கு இராவணன் இந்திரன் இவர்களே சாட்சியாதலால், பெரியோரைப் பழித்தால் நசித்து விடுவார்கள். நல்லவவர்களுக்கு பொருந்திய பொருளைக் கொடாதவர்கள் வலையராவார்கள். நந்தவனம் அழித்த வர்கள் உறுப்பழுகும் நோயை யடைவார்கள். கோட் சொல்லி கலகம் விளைத்தவர்களுக்கு வாயழுகிவிடும். வெண்கலம் திருடினவர்கள் அஞ்சாம் பிறப்பாளரா வார்கள். தேவஸ்தானப் பொருள்களை திருடினவர்கள் விஷமுடைய சர்ப்பங்களாகப் பிறப்பார்கள். தானியந் திருடினவர்கள் எலி, பெருச்சாளியாகவும், வாகனங்கள் திருடினவர்கள் ஒட்டகங்களாகவும், பசுவைத்திருடின வர்கள் ஆடாகவும், மாம்சம் திருடினவர்கள் கழுகாகவும், மீன்களைத் திருடினவர்கள் பாம்பாகவும், நெய் திருடின வர்கள் கீரியாகவும், பலாதி பண்டங்களைத் திருடினவர்கள் காக்கையாகவும், உப்பு திருடினவர்கள் சக்கரவாகப் பட்சியாகவும், பருத்தி நூல் திருடினவர்கள் கொக்காவும், பட்டு நூல் திருடினவர்கள் சிற்சிலிப்பறவையாகவும், பழங்கள் திருடினவர்கள் குரங்காகவும், புனல் திருடின வர்கள் தவளையாகவும் பிறப்பார்கள். இப்படி இன்னமும் விஸ்தாரமாய் உள்ளதெல்லாம் எடுத்துச் சொல்ல

வேண்டுமாயின் யாவராலு முடியாது விரிதரச் சொல்லப் புக்க வேதற்கும் முடியாதம்மா என்று சூதர் சொல்லியது உணர்வாயப்பா.

## (கி. பி. 1862-ம்வரு முதற் பதிப்பிலுள்ள பகுதி)

வினு: சிவத்ரோகம் செய்தவர்களுக்கு இச் சரீரத்திலாவது வரும் சரீரத்திலாவது என்ன வியாதியுண்டாகும்.

விடை: அவரை நிந்தை செய்தவர்களுக்கும் நந்திகேச்வரர் முதலிய அடியார்களைப் பழித்தவர்களுக்கும், அவர் கோயிலிற்சென்றும், வணங்காமல் நின்றவர்களுக்கும், அவ்விடத்து எச்சில் மல மூத்திராதிகளை விடுத்தவர்களுக்கும் ஸ்த்ரீ சங்கமம் செய்தவர்களுக்கும், அவருடைய வஸ்த்ராபரண வாஹன க்ஷேத்ர பாத்ர விக்ரகாதிகளை அபகரித்தவர்களுக்கும் பத்துவித வ்ரணங்களுண்டாகும்.

வினு: அந்தப் பத்துவித வரணங்களுக்குப் பெயரென்ன.

விடை: புஜக்ரணம், துர்க்கந்த கண்டமாலை, க்ரந்தி கண்டமாலை, நாசிக்ரணம், தொடைவாழை, பசுந்தரக்ரணம், கரவ்ரணம், பாதவ்ரணம், க்ருமிவ்ரணம், சிரவ்ரணம், ஆகிய இப்பத்தும் அந்தந்த பாவ தாரதம்யத்துக்கு ஏற்க உண்டாகும் என்றறிவாய்.

வினு: விஷ்ணுத்ரோகம் செய்தவர்களுக்கு என்ன கதிலபிக்குமையா.

## கி. பி. 1905-ம்வருஷ பதிப்பில் ஷை பகுதி இல்லாமல் புதிதாய்த் தொடங்கும் பகுதி

"வினு : இதுவரையில் யான் கேட்டு வந்ததில் இந் நூன் முதற்காப்பு, ஐந்தாவது செய்யுள் (கோலசம்போக விடங்கர் கொதித்தெற்றல் செய்கையிற், சீல சம்பூத சிதாதி மூலமென்று செப்பியக், காலசியமில்லாதருட் கண்ணனந் தனைப் போற்றியே.) என்றும், மத்தியில் (சோதிடம் பொய்யா தென்ற செய்யுளில்" ஹரியே தேவனென்பதையறிய முதனூ லரிச்சுவடியே சாட்சியாம்" என்றும், "ஆதியந்தம் ஹரியென யாவையும் ஓதினரலகில்லன உள்ளன, வேதமென்பன மெய்ந் நெறி நன்மையன், பாதமல்லது பற்றிலர் பற்றிலார்." என்றும், "சிற்குணத்தர் தெரிவரு நன்னிலை, எற்குணத் தரிது எண்ணிய மூன்றனுள், முற்குணத்தவரே முதலோ ரெவர், நற்குணக்கடலாடுதல் நன்றரோ." என்றும் ஸ்ரீ கம்ப நாட்டாழ்வாரும், "பேதையர் வேதப்பொருளிதென்றுன்னிப் பிரம நன்றென்று, ஓதி மற்றெல்லாமுயிரும:தென்று வுயிர்கள் மெய்விட்டு, ஆதிப்பரனோடு ஒன்ரு மென்று சொல்லு மவ்வல்லலெல்லாம், வாதில் வென்ருன் எம்மிராமா நுஜன் மெய்ம்மதிக்கடலே." என்று அமுதனுரும், ஆதிமத்யா வசானமாகப் பரமக்ருபையால் எடுத்துக்கூறிய பிரமாண சூசனைகளால் வேத முதல்வனுகிய முதற்கடவுளும் சர்வ ரக்ஷகனும் மோக்ஷப்ரதானனும் முகுந்தன் என்றே நிச்சயப் பட்டு, தேகமே ஆத்மாவென்கிற, அஜ்ஞானமும், தேவதாந்தர சேஷமென்றிருக்கையாகிய அந்யதாஜ்ஞானமும், ஆத்மா வையே பரமாத்மா என்கின்ற விபரீதஜ்ஞானம் என்னும், அஜ்ஞானத்ரயமாகிய இருட்டு தங்களுடைய திருமுகப்படி என்கிற சூரியனுற் பறந்துவிட்டது. நிகில வேதவேதாந்த சாஸ்த்ராதிகளில் நிகில ஜகதாதிகாரணனும், கர்மத்ரய கர்த்தாவும், ஸர்வஸ்வாமியும் அனந்த கல்யாணகுணா கணவி சிட்டனுமாயிருப்பவன் ஸர்வபலப்ரத ஸர்வேச்வரனுமான ஸ்ரீய: பதியென்று அறுதியிட்டிருக்கிற பிரமாணங்களை அறியாமல் அவ்வச்சுதனுக்குப் புத்திர பௌத்திரரான விதிசி

வாதிகளைச் சமானமாக எண்ணும் படிக்குக் கல்பித்து வசனிக்கிற சாமான்யர்கட்கு என்னகதி லபிக்குமையா.

விடை: அந்தர்யாமி பரமாக எண்ணி "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீராய்ச் சுடர்களிரண்டாய் அயனாய்ச் சிவனானாய்," என்று ஆழ்வார் முதலியவர் அருளிச்செய்தவைகளைக்கொண்டு தேவதாந்தரங்களையும், "ஹரி: ஓம்" என்று வேதம் அநந்தமாக ஆதி மத்யாந்தங்களில் சொல்லுகிற ஸர்வாத் பரனாகிய எம்பெருமானோடு ஒக்கவே எண்ணிச் சொன்னதாகச் சில மந்தமதிகள் சொல்வது சதாசாரியன் சந்நதியில் சாஸ்த்ர விதிப்படி வணங்கி ஸம்ப்ரதாயம் அறியாத அறிவு கேடென்றுணர்க. "திருத்த மற மூவவத்தைத் திறங்களினும் மூவரினுள், ஒருத்தனெனத் திருமாலை யுன்னுகின்ற வூனர்கட்கும், கருத்தனெனு மறவாழிக் கடவுளினு மின்னும்வே, றொருத்தனுளனென்றொரு நாவோட்டமுடனோட்டுனர்க்கும்." அவரைத் தூஷணித்தவர்களுக்கும், ஆழ்வாராதி தாசர்களை நிந்தித்தவர்களுக்கும் அவராலயத்திற் சென்றும், நமஸ்காரம் செய்யாதவர்களுக்கும் அவரது சடகோப தீர்த்த துளப ப்ரஸாதாதிகளைப் பக்தியோடு பெறாதவர்களுக்கும், அத்தலத்து உச்சிஷ்ட மல மூத்திரங்களை விட்டவர்களுக்கும், வனிதாலிங்கனம் செய்தவர்களுக்கும் அவரது க்ரஹ கராம தனதான்ய வஸ்த்ர ஆபரண வாஹன பாத்ர விக்ரஹ தாரு பாஷாணாதிகளைக் களவு செய்தவர்களுக்கும் பதினான்கு வித வ்ரணங்களுண்டாகும்.

விஞ: அவ்வரணங்கட்குப் பெயர் யாது.

விடை: தந்தவாய்வு, தாள்புத்து, நேத்ரவிப்ருதி, அபான விப்ருதி, நாடிப்புத்து, ராஜவ்ரணம், பாதாங்குலி

வ்ரணம், பசுந்தர வ்ரணம், குதகண்டமாலை, முதுகு பிளவை, நாபி வ்ரணம், காலம்ருத வ்ரணம், ஜல்லி கரந்தி, தனவிப்ருதி, இப்பதினுன்குவித வ்ரணங்களும் அவரவர் செய்தகுற்றத்திற்கேற்க இம்மையிலேனும் மறுமையிலேனும் வருவது சத்தியம் என்றுணர்வாயாக.

வினு: இப்போது சொல்லி வந்தவைகளெல்லாம் எந்த சாஸ்த்ரத்திலிருக்கிறது.

விடை: சத்துவகுணரக்ஷக கர்த்தாவாகிய அச்சுதனம்சத்தில் ஓர்பிரிவாகியும், ஆயுர்வேதியராகியும், விளங்கிய தன்வந்திரியார் திருவாய் மலர்ந்தருளிய வயித்திய சிந்தாமணி வ்ரண உற்பத்தி சொல்லிய ப்ரச்னத்திலும், கர்மகாண்டத்திலும், சூதசங்கிதை இரண்டாவது ஞானயோக காண்டம் ஒன்பதாவது பாவ கரும பல முரைத்த அத்தியாயத்திலும், இன்னும் அநேக சாஸ்த்ரத்திலும், சொல்லியிருப்பதைக் கண்டுணர்வாய்.

வினு: இப்போது நீர் சொல்லி வந்த நன்னெறிகளெல்லாம் சத்தியமே, இனி என்போலிகள். கடவுளின் திருவருளைப் பெற்று துக்கம் நீங்கி சுகத்தையடையுமோர் மார்க்கத்தைத் தயவுசெய்து சொல்லும்படி பிரார்த்திக்கின்றேன்.

விடை: அப்படி மேலான மோக்ஷசுகம் வேண்டுமாயினதற்கு மார்க்கமானது தரும தான மன்றி வேறில்லை.

வினு: இதற்கு மேற்கோள் யாது.

விடை:

பாடல்

அறத்தினூஉங் காக்கமுமில்லை யதனை
மறத்தலினூஉங் கில்லை கேடு.

என்றும்,

அற்காவியல் பிற்றுச்செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

என்றும்,

நாச்செற்று விக்குண்மேன் வாராமுன்நல்வினை
மேற்சென்று செய்யப்படும்.

என்று, திருக்குறளினும்,

ஆட்பார்த்துஉழலும் அருளில்கூற்றுண் மையால்
தோட்கோப்புக் காலத்தால் கொண்டும்மின்—பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாயலறக்கோடலான் மற்றதன்
கள்ளங்கடைப் பிடித்தல் நன்று.

என்றும்,

இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது
பின்றையே நின்றதுகூற்றம் என்றெண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையான்
மருவுமின் மாண்டார் அறம்.

என்று நாலடியினும் சொல்லியிருக்கின்றது. ஆதலான் யான் முற்கூறிய முப்பத்திரண்டறங்களைச் செய்தால் அதனால் புண்ணியம் வளரும், அது வளரப் பாவந்தேயும். அதனால் அந்தக் கரணமாசு நீங்கும் அது நீங்கி நித்தியா நித்தியங்களைப் பகுத்தறியும் அறிவு தோன்றும். அவ்வறிவால் ஓர் கடவுள் உண்டென்று நிச்சயம் தோன்றும். அந்நிச்சயத்தால் கடவுளை யறியவேண்டும் என்றும்

சிரத்தா பக்தி பிறக்கும் அதனுல் சாஸ்த்ரஞானம் வரும் அதனுல் விரக்தி பிறக்கும் அதனுல் சத்குருதரிசனம் உண்டாம். அச்சற்குருவால் மஹாமந்த்ரவாக்கிய உபதேசம் கிடைக்கும் அவ்வுபதேசத்து உட்பொருள் உசாவுதலால் தொண்ணூற்ரூறு தத்துவங்களைக் கடந்து ஒளிராகின்ற சுத்தாபரோட்ச திவ்விய மங்கள தேஜோமய சாக்ஷாத் பிரம்ம சைதன்னிய ஸர்வேசுவர சச்சிதானந்த சொரூப தெரிசனமாம். அத்தெரிசனத்தால் ஓர் போதும் ஓர் குறைவின்றி பேரானந்த சுக வைபோக தேஜோமய சிற்பராபர அச்சுதச் செல்வனோடு பொருந்தி நித்திய ஐசுவரியராய் பல்லாண்டு பல்லாண்டு பலகோடி நூறுயிரத்தாண்டாய் ஊழி ஊழி வாழ்ந்து சுகித்திருப்பது என்பதாம்.

வினு: ஆஹா-ஹா என்னன்பிற்குரிய பரிசுத்தநீதி ஞானப்ரசங்கத் தூய்ய ஐயாவே! மிகுந்த அற்புதமாகவும், ஆச்சரியமாகவும் முடிவிலா மோக்ஷ பாக்கியத்தைத்தரத்தக்க நற்குண நற்செய்கையாதி நன்னெறிகளை அறிவிக்கும் உமது அமுதசார வசனங்களால், என்னை அறிவானந்த அம்போதினியின்கண் முழ்கச் செய்த உமக்குக் கடவுளே இல்லையென்ற கர்மசண்டாளனும் தர்மசாஸ்த்ர சத்ருவும் நல்லோர் விஷயத்தில் சில வழிக்காத லோபியும் பெருமைக்கும் டம்பத்திற்கும் சம்பசம்ப விம்பகும்பத்தையுடைய நீசதோஷிவேசீ காசுதாதா காசுதாதா என்று பேசும் முன்னமே மழலைபடித்து குழலையெடுத்து கழலைபிடித்து நத்தையெடுத்து முத்து கொடுத்து சிந்தித்தப் பொருள் வந்தித்துடனிதோ தந்தோம் தந்தோம் என்று அளவிலாப் பொருளைக் கொட்டிக்கொடுக்க, விட்டமாய் நட்டப்பட்டுக் கெட்டுப்போகும் என் உடல் ஆக்கம் ஆவியை அளிக்கினும் ஓரளவின்றன்றே எனப் பேதுறுகின்றனன்.

விடை: ஆஹா. ஹா. இங்ஙன் நன்றுரைத்தனே அஃதிருக்க அகண்டாகண்ட அதுல அமல அச்சுத அனந்த லோசன பக்த ப்ரிய பாபநாச பரம புருஷோத்தம ஈறிலியாம் எமது அருளாழி வேந்தை எக்காலும் நினைந்து உருகி அவனருட்சுகிர்த ப்ரசாதத்திற்கெதிர் பார்த்திருப்பையோ வென்னும் என்னவாவை முற்றுவித்தலே நீ செய்கை மாறின் முறையென வாழ்வாயாக.

பால சம்வாத வினு விடை
முற்றிற்று.

முத்தொழில் முதல்வர் வாழி
முனிவர் வானவர்கள் வாழி
சத்திய மறைகள் வாழி
தரணிவாழ் உயிர்கள் வாழி
வத்துவையுரை சம்வாத வசனம்
வாசித்தோர் கேட்டோர்
நித்தனச் சுதன்தாள் பெற்று
நீடுழிவாழி வாழி.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஜீயர் திருவடிகளே சரணம்.

புதுவை, ஸ்ரீமத். ஏ. வே. விலக்ஷணகவி இராமாநுஜநாவல தேசிகோத்தமன் திருவடிகள் வாழ்க.



ஸ்ரீ:

**ஸ்ரீமத் ராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் இயற்றி யருளிய பால சம்வாத விரு விடை யென்னும் புருஷார்த்த தீபிகையின் முதற்பதிப்பான சாலி வாஹனஸூ 1785ல் நிகழும் துந்துபிஸூ சித்திரைமீ (கி. பி. 1862) புத்தகத்தில்**

உ

# பாயிரம்

### நிலமண்டில வாசிரியப்பா

சீருலாந் தேமாந்திண் பணைக்கோகிலஞ்
சீருலாங் கொம்புபோற் செவ்வியிற்பாண் செயத்
தண்டலை யரங்கிற் சவிமயினடந்தர
வண்டரா மறையோர் மறையிற் பாடிட
வனசநகைமுகை வளரன லோமமா
வனமடைப் பெடைதழீ இயார்மண மிழைத்தலும்
தேனுலாங்குதலைத் தீஞ்சொலங் கணையார்
கானுலாவுங் குழற்கண்ணகை கரமுகம்
காதுமூக்குந்திநா கணுக்கால் விரனகம்
காதலைவாவியிற் கவின்மலர்க் காட்டுறு
நந்துநொந்த லறிவாய்நன் மணியுயிர்க்கும்
நந்தலிற் செந்நெலார் நன்செயின்வளனு
மநந்தநாக் கொண்டுமனந்தனு முரைக்க
மநந்தடுமாறி மண்பறித் திடுவனு
லினையபன் மாட்சியா லெழின்மிகுந் திலங்குங்
கனைகுரன் முரசமார் கவியினும் செந்திரு
நீக்கமின்றினி துறைநிவேசனஞ் சூழவேப்
பாக்கம்தனி லெழிற்பண் புறவாழ்வோன்
அறிவாய்ப்பரம்பர அமிழ்தமாய் மயக்காய்
நெறியுறுவான்கான் நிகழநல் வாரியாய்

மண்ணுய்மறை முறைமரபில் பற்பலவாம்
எண்சரா சரங்களா யேனமா யிவற்றை
மருப்பினுலேந்திய மாயவன் கழலிணை
விருப்பினுலேத்திவாழ் விஞ்சையன் விஞ்சையர்
சங்கட்டந்தவிர் சழக்கில் வள்ளலாம்
வெங்கட்டராம வேள்விசிட்டாத்துவித
வாநந்தம்பெற வளப்பினுளி யற்றிய
மாநந்தவாத்தவ வடிவாயுதித்தவன்
அடக்கநிறை பொறையன்பு சான்ருண்மை
தடக்கலைத்தேர்ச்சி தயவுதாளாண்மையுங்
கூடியுறையு முறையுளா யுற்றவன்
நாடிவந்தவர்க்கு நகைமுகை மலர்ச்சியோன்
கற்பனக்கற்றுக் கற்றவா ருெழுகுவோன்
விற்பனக்கலையாய் வியன்மதி பெற்றுளோ
னிராமயப் பொருளை நெஞ்சகத்திருத்துபத்
திராமாநுஜப் பெயரேய்ந்த சுசீலனூற்
கற்றனைத்தூறு மறிவெனக்கலை ஞர்சொற்
குற்றநன்சான்ரு வூருணி யனையனை
கற்போர்கற்ருேர் கற்றிலர் யாரும்
மற்பாக்கேட்டு பயின்று மாராயும்
பாலசம்வாதப் பகர்விஞ விடையையெப்
பாலுறுமறி ஞரும்பத்தியாய் மதிக்கத்
தருகெனத்தாணு வாந்தரை புனலனல்கான்
மருவுறும்வான் மதிமன்ணரி யெச்சமா
அட்டமுகூர்த்தமா மதித்த சிவன்கழல்
எட்டுணைமறவா திறைஞ்சு தேவாங்கர்
மரபினில்வந்த மன்குமரப்பமா
றரமாப்பயின்ற தவத்தினிலு தித்தோன்
பிதாச்சொற் பிறழாபெற்றி யுற்றிலகும்
சதாசிவவள்ளலும் சாற்றினனுக
பன்னூலுதாரணம் பண்புறக் காட்டியும்
இன்னூல்வசன மாயிசைத்தனன் தனைப்
பொழிலுறுவள னெலாம்போந்துரு மித்துலாம்

பொழிலும் புதுவையார் புதுவையம் பதியினில்
வானுலாந்தரு மணிவளை யெழில்காம
தேனுவுமோன் ஞுத்திரண்டேரு ருவுகொள்
டுற்றதுசிவண வுரைதரும் புனிதநூல்
கற்றவர்பாவினிற் கலந்து சீருற்றுளோன்
பயன்மரமுள்ளூர் பழுத்தது போல்பவ
னயமுடன்னடி யர்பாலன்பு மீக்கொடு
மான்மழுகாள மறைகள முக்கண்
மான்மிகு வுமையாள்வாம முற்றிலகும்
பரனடிமுடிமனம் பரிக்குஞ் செய்கையன்
றிரனடியார் களைத்தேவா வுன்னுவோன்
ஈகையால் வந்தவர்க் கெழில்வளனுறலால்
ஈகையின் பெயரையேதுவாக் கொண்டவன்
செய்யுந்தவத்தில் செகதலம் புகழ்தர
செய்யநற் குணங்கள் செழிக்கவுதித்தவன்
ருனம்பனு முனந்தரு தலாலறிஞர்
தானப்பனென்றே சாற்றப் பெற்றவன்
அற்புதப்பாக்கள் சொல்அருமையும் எவரும்
அற்புதப் புருமல்அறிந்தறி வுறவே
யுச்சிதமாக வுலகினில் நிகழ்தர
அச்சிடவைத் தனன்அன் பொடுமாதோ.

—(•)—

இ:.து

புதுவை-சாமி-பொன்னுவுபாத்தியாயராற்

சொல்லப்பட்டது

பாயிரம்-முற்றும்

இப்பாடல் கி. பி. 1905ம் பதிப்பு புத்தகத்திலும் இருக்கிறது.

சாற்றுக்கவி

## இ∴து புதுவை-முத்துவினைதீர்த்த முதலியாரவர்கள் சொல்லியது.

சீருலாங்கமலத் தணாங்கரசுநா தனை சிந்தையிலிருத்து
முரவோன்
பாருலாந்தமிழினைத் தமிழினெந்நாளும் பயிற்றி ராமாநுஜகவி
நாருலாநாரதனு நாரதனுமாக மேநகையுமேனகையுமாக
வேருலாம்பால சம்வாதம் பகர்ந்தனன் வேளேனையோர்க்கென்
[பனே.

## புதுவை-சிவீல்நீதி இந்திரப்பிரேத்து வீரராகவ முதலியாரவர்கள் சொல்லியது.

மகன்றுதைக்குதவி செயலவன்றவத்தை
யெடுத்துரைக்க வகுப்பனென்ன
புகன்றபுகழ் கொண்டவிராமாநுநுனுங்
கவிஞனிந்தப்புவியின் மாந்தர்
அகங்களிக்கப் பாலர்கள்செய் சம்வாத
வினுவிடை தந்தவனைப்போல
விகனடையத் தாதைகள்செய்தவமென்
கொலென வியப்பவியற்றினனே.

## இ∴து திருவெண்ணெய்நல்லூர் இராஜப்ப உபாத்தியாயரவர்கள் சொல்லியது.

உலகினிடையாரண புராணமனு நீதிநூலுணர்ந்
தறிவினிற் சிறந்தோர்
ஓதறம்பொருளின்பம் வீடடைத் லென்றே
யுரைத்தநூற் பயனெளிதினிற்
புலனுற்சிறுவர் களுமுணரும் வழியோர்நூல்
புகன்றளித்திடு தியென்ன

புகழுறுந்தே வாங்கர்குலமுத்து குமரப்ப
பூபனருளிய புத்திரன்
நலனுறுசதாசிவப் பெயரோன் விளம்பவுள்
நனிமகிழ்ந்திய னூலெலா
நாடிமேற்கோளுடன் பாலசம்வாத மென
நவில்வினு விடைசெய்தனன்
இலகுபூஞ்சோலை மலர்வழி பிழிவயற்பாயும்
ஏப்பாக்கமெனு நகரினுன்
இயலும் வேங்கடராம பணிலமருள் முத்தெனு
மிராமாநு சக்கவினுனே.

## இஃது-கடலூர், சிவசிதம்பரமுதலியாரவர்கள் சொல்லியது.

காலமுணர்ந்த கலைஞர்கடங்கருத்துக்
கருதுமரியவெலாஞ்
சாலவுணர்ந்திட்டவுணர் விச்சகக்குமுணர்த்துந்
தண்ணளியால்
ஞாலமுண்டோன் தனையுளங்கொணல்லோனி
ராமாநுஜப்புலவன்
பாலசம்வாதப்பெயர்நூல் பகர்ந்தான் அவன்சீர்
பகர்வரிதே.

## இஃது-புதுவை தருமக்கல்விக்கூடம் சுப்பராய உபாத்தியாயர் சொல்லியது.

சீர்பெறுமேப்பாக்க மதிற்றங்கினாளுந்
திகழுமிரா மாநுஜப்பேர்ச் சிறந்தமேகம்
பார்பெறுநற் பல்கலையம் பரமருந்திப்
பாலர்கள்சம்வாத வினுவிடை நூன்மாரி
ஏர்பெறுமிவ்வுலகர் செவிவரையிற்பெய்த
தினியவனோர் மனப்பழனத் தெய்தியென்றும்
பேர்பெறுஞானப்பயிர்கள் தழைத்தேகயின்பப்
பெருங்கதிரின் விளைவோங்கிப் பிறங்கத்தானே.

## இஃது-வித்தியாநிதி-யந்திரசாலை

### சுப்பு இராமசுவாமி முதலியாரவர்கள் சொல்லியது

கற்றுவலநாவலருமிந்நூலை வியப்புடனே
காண்பாராயின்
சிற்றறிவேனிதுபுரியுமி ராமாநுஜக்கவிஞன்
சிறப்பென்சொல்வேன்
சொற்றிடினிங்கொருவாறு புகழிவற்குந்துன்னுது
தொல்லைநாளிற்
பெற்றிடவோர்தவமுயன்ற வேங்கடராமற்
கன்றிப்பேசினம்மா.

### இது பாரதப்பிரசங்கம்-தருமதானபுரம்

### ஸ்ரீமது கண்ணுவையரவர்கள்
### இந்நூலைக்குறித்துச் சொல்லியது

இந்த பூமண்டலத்தில் இத்தமிழ் நாட்டில் இதுவரையில் அனேகப்ரசாரமாகப் பல கருவி நூற்களைக்கொண்டு பாலபோதனையை வித்வான்கள் செய்துகொண்டு வந்த போதிலும் இந்நூல் யதார்த்தத்தில் சாஸ்த்ரஞானத்தையும் தந்து மேலோர்க்கும் உபயோகமாய் இதைப் பார்த்திதே மாதிரியாக சிலர் செய்யவெத்தனித்தபோலி நூற்களையன்றி வேறு தனக்குவமையற்றதாயும் பகற்காலத்திலும் தமிழர்க்குபயந்துகொண்டு வேவுபார்த்தலுடனே தனக்கன்னியருடைய தீனி சமயத்தில் பல்லைக்காட்டி மிகுந்துபோன எச்சிற் சாராயங்களையும் மேற்படி ரொட்டித் துண்டங்களையும் மாமிச கண்டங்களையும் இரந்துண்டு அம்மயக்கத்தினுல் நீசஸ்த்ரீசம்போக முடையவராய் தனக்கனேக விதத்தில் மேலோரையும் நாவிற்கிசைந்தபடி

வைதற்கொருமித்து மஹாபாதகர்கள் முதலானவர்களை யும் தங்கள் பழய நெறியில் தப்பாது நடத்துதற் கொரு தரும நூலாகவும் அடிக்கடி தங்களை வேறான ஜாதியாக நினைத்துக்கொண்டிருக்கிற மூடர்கள் துரபிமான காட்டை வெட்டுதற் கொரு கோடாலியாகவும் இருக்கிறபடியால் அத்யாவசியமாக யாவரும் அறியவேண்டிய தென்றி தென் கருத்து.

இது சொக்கபுரம் இராமலிங்கத்தம்பிரானவர்கள்

சொல்லியது

உதயகிரியிலெழு தருமென் றுலேவிலுலகப புறத்திமிரம்
புதையும்பனியோ டோட்டுகினும் பொலியும்பின் னரவைமாந்த
ரிதயல்லேயுறும்பனியை யென் றுமிரியல் செயுங்கலேயே
தகையிராமாநுஜக்கிரி மேற்றுவிவரு நாற்றினகரனே.

புதுவை-தருமக்கல்விக்கூடம்

சிற்றம்பல உபாத்தியாயரவர்கள்

சொல்லியது.

காலவுணர்ந்த குறுமுனிதொல்காப்பியர் முதலாச்
சீலமுயர்ந்தபுலவர் வியந்துதினங்களிக்க
ஞாலம்புகழுமிராமாநுஜக் கவிராஜனன்பாப்
பாலருணரவும் பாலசம்வாதம் பகர்ந்தனனே.

புதுவை-குமாரசாமி உபாத்தியாயரவர்கள்

சொல்லியது

சீருலவும்பாலர்கள் சம்வாதவினுவிடை
யியற்றிச்சிறுவர்க்கீந்து
பாருலவும்புகழ் படைத்ததுபோதாதென
வுணர்ந்து பண்பின்மிக்க

தாருலவுதோளனிராமாநுஜன்ருன் எவர்க்குமச்சி
லிட்டுத்தந்தான்
காருலவும்புவியிலிதைப் போலருமையின்ன
தெனக்கழறுேணுமே.

## புதுவை-கூர். கிரேப்பியோ

## கந்தப்பசபாபதி முதலியார் அவர்கள் சொல்லியது

குறுமுனிகுன்றவில்லிகுகன் சேடன்எனுமிந்நால்வர்
பெறுபருப்பதம் பார்க்கீழேபேதுறக் குளித்தாராயின்
உறுதிருப்பதிராமன் காலுயரிராகவன் பின்னேன்சொல்
செறுபாலதருக்கமான தெளிகடாவிடையார் தேர்வார்

## புதுவை-வெ. பொன்னையா முதலியாரவர்கள் சொல்லியது.

அறமுதனுன்கின்பயன் சிறுவருமோர்ந்தடைதரப்
பாலசம்வாத
நெறியுறுநாமந்தரித்தோர் வாக்கியநூல் நிகழ்த்தின்ன்
புகழ்பெறவறிவால்
குறைவிலாராமாநுஜக்கவி பின்னுங்குணமுளோ
ரவையினும்விளக்கி
நிறைதருமுலகோர் வியப்பொடன்னெறியினிலங்க
வச்சினும்பதித்தனனே.

முற்றிற்று.

சாலிவாஹன ஸூ 1785ல் நிசமூம் நந்த பிஸூ சித்திரைமீ (கி. பி. 1862) பதிப்பித்த "பாலசம்வாத விஜ விடை" முதற்பதிப்பில் கண்ட சாற்றுக்கவிகள். இந் நூல் பள்ளி கொண்டாபுரம் திரு. மா வேங்கடகிருஷ்ணப்பிள்ளையினது எனக்கு திரு.வி. பு தூர். வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியாரால் கிடைத்து எழுதிக்கொண்டேன்.

K. நாராயண ரெட்டி.

9-6-1972.

ஸ்ரீ:

## காத்யாயனோப நிஷத்

## முன்மொழி

இந்த காத்யாயனோப நிஷத்தை ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யரான அனந்தாழ்வான் ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸமாலா என்னும் க்ரந்தத்தில் ப்ரமாணமாக எடுத்துக்காட்டியருளினர். ஆகையால் இது ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது. இது அடையாறு லைப்ரரில் ஓலைகோசத்தில் இருக்கிறது. அச்சிட்டும் இருக்கிறார்கள். கி. பி. 1881ஸூ அச்சிட்டுள்ள ப்ரபந்நா நுஷ்டான பாஸ்கரமு என்ற தெலுங்கு புத்தகத்திலும் இந்த உபனிஷத்து வந்திருக்கிறது. ஸ்ரீமத் தொந்தி ரெட்டி வம்சத்தில் பிறந்த படடாபிராம (ரெட்டி) தாச சுகவியால் செய்யப்பட்ட ஸ்ரீமதாந்த்ர பூர்ணசார்ய ப்ரபாவமு என்ற பத்ய காவ்யமான நூலில் த்வீதீயோல்லாசத்தில் அதோர்த்வ

புண்ட்ர ச்ருதய: என்ற தலைப்பில் இந்த காத்யாயனோப நிஷத் முழுதும் எடுத்தாளப்பட்டிருக்கிறது. இந்நூல் கி. பி. 1838ல் அச்சானது. மேலும் முடிச்சூர் ஸ்ரீமத் அப்பாவார்ய ஸ்வாமிகள் எழுதிய கி. பி. 1909ல் வெளியிட்ட ஸ்ரீமத் தென்னுசார்ய ப்ரபாவம் என்ற நூலிலேயும் கி. பி. 1912ல் வெளிவந்த ஸ்ரீமத் தென்னுசார்ய ப்ரபாவதீபிகையிலேயும் இந்த காத்யாயனோப நிஷத் பதிப்பித்து விளக்கமும் எழுதியுள்ளார். திருச்சியை அடுத்த புத்தூர் அக்ரகாரத்தில் இருக்கின்ற ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐய்யங்கார் M.A., B.L., அட்வகேட் அவர்கள் வெளியிட்டுள்ள விஷ்ணு சித்த விஜயம் இரண்டாம் பாகம் 1142ம் பக்கம் 2ம் பதிப்பு 1106ம் பக்கமும் இந்த காத்யாயனோபநிஷத்தை பதிப்பித்து மொழி பெயர்ப்பும் செய்துள்ளார். சாத்தாத ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த தீபிக சங்க்ரஹ: என்ற புத்தகத்திலேயும் இவ்வுபநிஷத் வந்துளது. ஆதலின் சிஷ்டர்கள் ஏற்றுக் கொண்ட பழய ப்ரமாண உபனிஷத்து என்னத் தட்டில்லை.

K. நா.

శ్రీః

# కాత్యాయనోపనిషత్

అథప్రణిపత్య కాత్యాయనో బ్రహ్మాణ మన్వయుక్త। అధీహి భగవో మే కిం పవిత్రాణాంపవిత్రం। కేన వా కర్మాణినఫలాని। యద్ధుష్కరంతపో మర్త్యానాం కేనసుకరేణామృతత్వ మేతి సహో వాచ। తేన యోగీశృణు। భోపవిత్రంసులభంసుకరం। యద్విష్ణుక్షేత్రంతత్రమృత్స్నాంశ్వేతాముద్ధృత్య తాసీత్యుద్ధరేత్। అమృతమేవ శ్వేతమృత్స్నా భవతి। తాంశుద్ధజలేనప్రణవేన సంకర్షయేత్। దేవపిత్రుకర్మాణ్యారభమాణః। తయానిత్యమూర్ధ్వపుండ్రంబిభృయాత్। మంత్రైః కేశవాదీనాంతద్రహితం కర్మవిఫలం। రక్షాంసిగృహ్ణీయుః। తదేవముభ్యుక్తంభవతి। నాసాదికేశాంతమూర్ధ్వపుండ్రం। విష్ణోస్థితస్యచరణద్వయాకృతిః। ఏకాంగులంపాదతరోరస్యమూలం। తదుత్పన్నేచ ద్వేశాఖే। తద్దైవచముద్యావకాశో ద్వ్యంగులాదన్యూనః। సఃశ్రీప్రతిష్ఠాయై శ్రీహరిద్రాయుతో హరింద్రావయతివిష్ణునాసహ। ఆదిత్యవర్ణే శ్రీఫలేదారయేత్। తజ్జలేన శ్రీబీజేనసంమృజ్యతత్సూక్ష్మరేఖాంధారయేత్। సశ్శ్రీమాన్ భవతి। తద్ద్వేశాఖే హంసవర్ణే। గాయత్రీత్రిష్టుప్ చంద సే ఆత్మపరమాత్మదైవతే। దర్శపౌర్ణమాసికేష్టాపూర్తిక్రియే। భుక్తిముక్తిఫలే। సారేఖాశ్రీవర్ణా। గాయత్రీచందః ఆనందక్రియామృతత్వఫలా। అయంపుండ్రవిధిః। ఏవం విదిత్వా యోధారయతి। సవైదికో భవతి। సస్వకర్మార్హో భవతి। శాయి గాత్సాత్కాత్। పూతో భవతి। సవిష్ణుసాయుజ్యమవాప్నోతి। య ఏవం వేదేత్యుపనిషత్ సహనావవతు.

ஶ்ரீ:

# காத்யாயநோபனிஷத்

அத, ப்ரணிபத்ய காத்யாயனோ ப்ரஹ்மாண மந்வயுங்க்த, அதீஹிபகவ: கிம் பவித்ராணும் பவித்ரம் கேனவா கர்மாணிஸபலாநி, கிம் துஷ்கரம் தபோ மர்த்யாணும், கேந ஸுகரேண. அம்ருதத்வமேதி, ஸஹோவாச, ஸாதுதேஸுயோக: ச்ருணுபோ: பவித்ரம் ஸுலபம் ஸுகரம், யத்விஷ்ணுக்ஷேத்ரம், தத்ரம்ருத்நாம் ச்வேதாம் "உத்த்ருதாஸி" இத் யுத்தரேத், அம்ருதமேவ ச்வேதம்ருத் ஸ்நாபவதி, தாம் சுத்த ஜலேன ப்ரணவேந கர்ஷயேத், தேவபித்ரு கர்மாண்யாரபமாண ஸ்தயா நித்யமூர்த்வ புண்ட்ரம் பிப்ருயாந் மந்த்ரை: கேசவாதீனும், தத்ரஹிதம் கர்ம நிஷ்பலம் ரக்ஷாம்சி க்ருஹணீயு:, ததேவ மப்யுக்தம் பவதி, நாஸாதி கேசாந்தமூர்த்வபுண்ட்ரம் விஷ்ணோஸ்திதஸ்ய சரணத்வயாக்ருதி, ஏகாங்குலம் பாததரோரஸ்ய மூலம், ததுக்பந்நே த்வேசாகே, ததேவ மத்யாகாரோங்குலாதந்யூந:, ஸஸ்ரீப்ரதிஷ்டாயை, ஸ்ரீர்ஹரித்ராயதோ ஹரிம் த்ராவயதி! தச்ச்ரீசூர்ணம் ஸ்ரீயாவத்ருதம் ஆதித்யவர்ணம் ஸ்ரீபலேதாரயேத், தஜ்ஜலேந ஸ்ரீபீஜேன ஸம்ம்ருஜ்யதத் ஸூக்ஷ்மரேகாம் தாரயேத், ஸஸ்ரீமான் பவதி, தத்வேசாகே ஹம்ஸவர்ணே காயத்ரீத்ரிஷ்டுப் சந்தஸீ ஆத்மபரமாத்மதை வத்யே தர்சபூர்ணமாசிகே இஷ்டாபூர்த்திக்ரியே புக்திமுக்திபலே, ஸாரேகா ஸ்ரீவர்ண காயத்ரீ சந்த:! ஆனந்தக்ரியா அம்ருதத்வபலா, அயமூர்த்வ புண்ட்ர விதி:, ஏவம் விதித்வாயோ தாரயதி ஸஸர்வகர் மார்ஹோ பவதி, காயிகாத் பூதோ பவதி, ஸ விஷ்ணுஸாயுஜ்ய மவாப்நோதி, ஸ விஷ்ணு ஸாயுஜ்ய மவாப்நோதி, ய ஏவம்வேத:, இத்யுபநிஷத்॥

ஸ்ரீ:

## காத்யாயனோப நிஷத் (தமிழ்)

"பகவானே! பரிசுத்தங்களைக் காட்டிலும் பரிசுத்தமாயிருப்பதுயாது என்று எனக்கு உபதேசிக்கவேண்டும்; எதனால் கருமங்கள் ஸபலமாகின்றன? மனிதர்களுக்குச் செய்யவரிதான தபஸ்யாது?" என்று காத்யாயனர் பிரமனை வணங்கி வினவினார். "பரிசுத்தமானதும் சுலபமானதும் சுகரமானதுமான அதைச் சொல்லுகிறேன் கேள். ஸ்ரீரங்கம் முதலிய விஷ்ணுக்ஷேத்திரத்திலுள்ள வெள்ளை மண்ணை "உத்த்ருதாஸி" என்ற மந்திரத்தினால் எடுக்கவேண்டும். மோக்ஷஸ்வரூபியான பகவானே ச்வேதம்ருத்ஸ்வரூபனாயிருக்கிறான். அந்தத்திருமண்ணை ப்ரணவத்தை உச்சரித்துக்கொண்டு சுத்த ஜலத்தில் குழைக்கவேண்டும் தேவகர்மங்களான ச்ராத்தம் முதலியவற்றையும் ஆரம்பிக்கும்போது இந்தத் திருமண்ணைக் கொண்டு, கேசவன் முதலிய மந்த்ரங்களை உச்சரித்துக் கொண்டு தினந்தோறும் ஊர்த்வபுண்ட்ரத்தை தரிக்கக் கடவர். ஊர்த்தவ புண்ட்ரமில்லாமல் செய்யும் கார்யம் பலமற்றதாக ஆகிறது. அதைராக்ஷசர்கள் க்ரகித்துக் கொள்வார்கள். இம்மாதிரி மந்த்ரங்கள் சொல்லுகின்றன:—மூக்கிலிருந்து மயிர்வரையில் உள்ளதாகவும் நிற்கும்படியான பகவான் விஷ்ணுவினுடைய இருதிருவடிகளைப்போன்ற உருவத்தை உடையதாகவும் இருப்பது ஊர்த்தவ புண்ட்ரம். திருவடிகளாகிற விருக்ஷத்திற்கு வேர்போலிருப்பது ஒரு அங்குலமுள்ள பீடம். அதிலிருந்து உண்டாயிருப்பது இரண்டுகிளைகள் அவைகளுக்கு இடையிலுள்ள இடைவெளி ஒரு அங்குலத்துக்குக் குறையாமலிருக்கவேண்டும். அந்த இடைவெளி ஸ்ரீதேவியின்

ப்ரதிஷடைக்காக உள்ளது. ஸ்ரீதேவியே ஹரித்ரா சூர்ணம். ஹரியை ஆசைப்படும்படி பண்ணுகிறபடியால் ஹரித்ரை எனப்படுகிறது. ஸ்ரீதேவிபால் தரிக்கப்பட்டதும் சூர்யனைப் போன்ற வர்ணத்தையுடையதுமான ஸ்ரீ சூர்ணத்தை வில்வக்குடுக்கையில் வைத்துக்கொள்ள வேண்டியது. அந்த ஸ்ரீ சூர்ணத்தை ஸ்ரீ பீஜமந்த்ரத்தைச் சொல்லிக் குழைத்து மெல்லிய ரேகையாகத் தரிக்கக்கடவன். இப்படி தரிப்பவன் கைங்கர்ய லக்ஷ்மியை உடையவனு கிருன். அந்த இரண்டு ரேகைகளும் ஹம்சம்போன்ற (வெளுத்த) வர்ணத்தை உடையவையாகவும், காயத்ரிஷ்டுப் சந்தஸ்ஸை உடயவையாகவும், ஜீவாத்ம பரமாத்மாக்களை தேவதையாக உடையவையாகவும் தர்சபூர்ணமாசயாக பலத்தையும், (யாகம் செய்தலாகிய) இஷ்டம் குளம்வெட்டுதல் முதலிய) பூர்த்தம் முதலியவற்றின் பலத்தையும், போகமோக்ஷபலங்களையும் தருவதாயும் உள்ளன. இடையிலுள்ள ஒரு ரேகை ஸ்ரீதேவியைப்போல் சிவந்த நிறமுடையது. காயத்ரீ சந்தஸ்ஸை உடையது. ஆனந்தத்தைக் கொடுப்பதாயும் மோக்ஷத்தைப் பலனுக உடையதாகவும் இருக்கிறது. இதுவே ஊர்த்தவபுண்டர விதி. இப்படி அறிந்து எவன் தரிக்கிறுனே அவன் எல்லாக்கருமங்களையும் செய்யத்தக்கவனுகிருன். காயிக பாபங்களுமுள்பட நீங்கப்பெறுகிருன். இதை அறிபவன் விஷ்ணு சாயுஜ்யததை அடைகிருன். இதுவே உபனிஷத்—'

---

தெய்வப்புலமை 'அரிதாசர்' அருளிச்செய்த

# இருசமய விளக்கம்

## வேத வேதாந்த விதிப்படலம் திருமண்காப்பு என்கிற ஊர்த்துவ புண்டர பசிச்சேதம்

### பாட்டு 4

சீதரனுரிணை யடியின் சீர்மைபெற
இடைவெளியுந் திருத்தமாக
மீதுயர் புண்டரமணி வார்அந்நெடுமால்
திருவுள்ளம் விரும்பப் பெற்றுப்
பாதகமெலாந் தொலைத்துப் பரமபதத்து
ஆனந்தம் பயில்வா ரென்று
மாதுநல்லாய் வேதாந்தம் எண்ணுன்கின்
உரைத்த கடவல்லி சொல்லும்.

புதுவை விலக்ஷணகவி

ஏ. வே. இராமாநுஜ நாவலரவர்கள் இயற்றிய "ஸ்ரீபாத் மோத்தர புராணம்" ஊர்த்துவ புண்டர படலம் பாட்டு 17

நாசியின்மூலங் கேசத்தி னந்தம்
நடத்திடல் விரற்கடை யகலம்
ஆசிசெய்தமல னடிகளை யிடைவிட்டு
அழகுற வமைத்து நம்மன்னை
நேசமாந் திருச்சூரணம் விளக்குருவாக
நிறுத்தல் நன்ருகும் மந்திரங்கேள்
கேசவனுகு நுதலினிற் சிரத்திற்
கிளர்திரு வாசுதேவ னுமாம்.

## திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றிய

## திருவரங்கத்துமாலை பாட்டு 10

விண்ணிட்டசோலை அரங்கத்துமேவிய மெய்ப்பொருளை
கண்ணிட்டபார்வையில் கட்டியென் கண்வரக் கண்டெலாம்
புண்ணிட்டவண்ணக் கிழியுட்பொதிந்து புரத்துவெள்ளை
மண்ணிட்டிலச் சினையிட்டு விள்ளாதுஉள்ளம் வைத்தனனே

## திருவரங்கத்தந்தாதி பாட்டு 72

மணிவாசற்றூங்க வொருகுடைக்கீழ் வைய்யங்காத்துசிந்தா
மணிவாசவனென வாழ்ந்திருப்போர் பின்னைமாதிருக்கு
மணிவாசமார் பரங்கா! கேசவாஎன்று வாழ்த்தித்திரு
மணிவாசகங் கொண்டணிவாரடியை வணங்கினரே

## திருவேங்கடத்தந்தாதி பாட்டு 99

திருமந்திரமில்லை சங்காழியில்லை திருமணில்லை
தருமந்திரமொன்றும் செய்தறியீர் செம்பொன்குனவனை
மருமந்திரங்கப் பிளந்தான் வடமலைவாரஞ் சொல்லீர்
கருமந்திரண்டதை யெத்தாற்களை யக்கருதுதிரே

## ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

## "ஸச்சரித்ரரக்ஷை" யில் ஊர்த்வபுண்ட்ரதாரன

## விதியில் பக்கம் 95

### சேட்லூர் ஸ்வாமி பதிப்பு.

"ஹரே: பாதாக்ருதி மாத்மனோஹிதாய மத்யேச்சித்ரம்
ஊர்த்தவபுண்ட்ரம் யோதாரயதிஸபரஸ்ய
ப்ரியோபவதி ஸபுண்யவான்
பவதிஸமுக்திமான் பவதி" —அதர்வணவேதம்

"எவன் பகவானுடைய திருவடிகளின் ஆகாரம் போன்ற" ஆகாரத்தை யுடையதாயும், நடுவில் இடை

வெளியை யுடையதாயும் இருக்கிற ஊர்த்தவ புண்ட்ரத்தை தனக்கு நன்மை யுண்டாவதற்காகத் தரிக்கிருனே அவன் பகவானுக்குப் பிரியனுகிருன் புண்யத்தைச் செய்தவனு கிருன் மோக்ஷத்தை யடைந்தவனுகிருன்" என்றுளது.

ஸ்ரீவேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸச்சரித்ர ரக்ஷையில் ஸ்ரீவைஷ்ணவர்கள் தரிக்கத்தக்க சின்னங்கள் குறிப்பிட்டுள்ளவை 22.

அவையாவன.

1 பாதாக்ருதி 2 பாதிசந்த்ராக்ருதி 3 தாமரைப்பூ 4 அக்கிஜ்வாலை 5 கதை 6 சக்கிரம் 7 தாமரையிதழ் 8 சங்கு 9 தடி 10 மூங்கில் இலை 11 தாமரைமொக்கு 12 ஆம்பல் 13 கருநெய்தல் 14 மத்ஸ்யம் 15 கூர்மம் 16 முறம் 17 மோகினிப்பூ 18 மோகினி இலை 19 அரசிலை 20 மல்லிகைப்பூ 21 புளி இலை 22 சதுரம்.

இந்த 22 உருவவேறுபாடுகளில் இடத்தக்கது ஹரி பாதாக்குதிதான் சிறந்ததென்று ஷை நூலில் 139, 141ம் பக்கங்களில் நிச்சபித்துள்ளார் ஆதலின பகவானுடைய இரண்டு திருவடிகள் போன்ற ஊர்த்த்வபுண்ட்ரந்தான் சரியானது.

"ஸ்ரீப்ரச்ன ஸம்ஹிதை" "ஊர்த்த்வ புண்ட்ரம் ருஜும் சுத்தம் ஹரிபாதத்வயாக்ருதிம்" என்றும் ஈச்வர ஸம்ஹிதை 21 அதயாயம் தீக்ஷாவிதியில் 299 ஸ்லோகம்.

"ஊர்த்த்வபுண்ட்ரம் ருஜும் ரம்யா ஹரேః பாதத்வயாக்ருதிம்" என்ற ப்ரமாணததாலும் இரண்டு திருவடிகள் உருவததில் மேல்நோக்கி திருமண் இடவேண்டும் என்பது நிச்சயம்.

நாவலர் பெருமானுடைய திருவவதாரஹூ 76க்குச் சரியான விசுவாவசுஹூ மாசிமீ 7௨ (கி. பி. 1905) பதிப்பித்த "பாலசம்வாத வினு விடை" நூலில் புதுவை சாமி-பொன்னு உபாத்தியாயரால் சொல்லிய நிலைமண்டில வாசிரியப்பா பாயிரம் மட்டும் இருக்கிறது. ஏனைய பாடல்களாவன விவை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே வரவராய பரமதயாகுரவே நம:

## தனியன்கள்

இந்நூலாசிரியரவர்கள் கிருபாபாத்ரபூதவர்க்கங்களில் ஒருவரும் ஷை ஆசிரியவர்கள் இராமாநுஜகூடத்து கார்யதரிசியுமாகிய நெல்லித்தோப்பு உபாத்தியாயர் ஸ்ரீமாந் திருமழிசையிராமாநுஜ தாஸரவர்களால் இயற்றப்பட்டது.

## பின்முடுகு நேரிசைவெண்பா

பூவலரே லாம்மணியும் பொற்புளரா மாநுஜச்சீர்
நாவலன்செய் போதகத்தை நாடியே—மேவியஞேன்
செங்கமலத் துங்கபதந் தங்குதுகள் பொங்குசிரஞ்
சங்கையுறக் கொண்டணிடு வேன்.

1 சம்=பெருமை, கை=ஒழுக்கம் (எண்ணும்மை)

## நேரிசை வெண்பா

வேட்டுவன்போல் வேடத்தைவேறு செய்தோர் தம்முளத்தை
வேட்டுவன்போல் செய்துவந்த வேதையொழிந்—தோட்ட
ஆவலுடன் தாயினருள் மிகுராமாநுஜநல் [மிழும்
நாவலன்ருன் பேருருய் நாடு

இந்நூலாசிரியரவர்கள் மாணுக்கர்களிலொருவரும் ஷை ஆசிரியரவர்கள் இராமாநுஜ கூடத்து உபகார்யதர்சியுமாகிய

பவழக்காரன் சாவடி உபாத்தியாயர் ஸ்ரீமான் விராமாநுஜ தாசரவர்களால் இயற்றப்பட்ட பாஷிய நேரிசை வெண்பா.

இசையருள்சே ரெந்தை விராமாநுஜனென்
றிசைநா வலன்ரு ளிராவெல்—லிசைய
விசையத் துதிப்போ ரிணையடியின் றூளே
யிசைசிரத்திற் சேர்த்திடுவே னின்று

முத்தநெறி காட்டிநிதம் மும்மறையை யூட்டிமகிழ்
சித்தியுறு மன்பரகஞ் சேர்ந்திலகி—நித்தமுறும்
காவெனுமுன் காத்தருளும்கர்த்தனி ராமாநுஜப்பேர்
நாவலன்ருள் என்னெஞ்சே நாடு

ஸ்ரீமத் ஸதாசார்யன் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமத் சடகோபாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் வரவரமுனயே நம

ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் பெருமான் திருவடிகளே சரணம்.

## களிப்புரை.

என்குல நாதனுன திருவரங்கன் திருவருளால், நல்லவர்கள் திருநாமங்கள் நாடோறும் நவிலும் பாக்யம் கிடைக்கப்பெற்றேன். நித்ய சூரிகளில் ஒருவரின் அவதாரமான ஸ்ரீமத் ராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் திவ்ய வைபவ சங்க்ரகம் இப்போதுதான் (1972) எழுதி அச்சிட்டு அவர் திருவடிகளில் அடியேனது பரிதாபிஸ்ரீ வைகாசிமீ 24வ செவ்வாய்க்கிழமை உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில் (6—6—1972) அனபுடன் சமர்ப்பித்துக்கொண்டேன்.

அடியேனுக்கு 73ம் ஆண்டு முடிவில். இனியாவது இந்த நல்ல வேலைகளில் ஈடுபட வேண்டாமா? வைபவம் அச்சாய்க் கொண்டிருக்கும்போதே நாவலர் பெருமான் இயற்றியருளிய பல நூல்களில் முதல் நூலாகவும் பாமர பண்டித மக்களுக்கு முதன்மை நூலாகவும் இயற்றியருளிய ''பால சம்வாத விஞ விடையென்னும் புருஷார்த்ததீபிகை'' என்ற சிறந்த நூலை அச்சிட்டு பண்ணுருட்டி நாவலர் சபையிலேயே வெளியிட முயன்றேன். அந்த நூல் நம்பக்கத்தில் யாரிடத்திலிருக்கிறது எத்தனை பதிப்பாகி யிருக்கிறது என்பது ஒன்றுந்தெரியவில்லை. வி. பூதூர். வித்வான். கி. வேங்கடசாமி ரெட்டியார் தம்மிடம் ஒரு படிவம் இருப்பதாகச்சொன்னார்கள். அந்நூலை அன்பினால் வற்புறுத்தி அடியேன் வாங்கினேன். அதுதான் முதற் பதிப்பு. அந்நூல் ஷை வேங்கடசாமி ரெட்டியாரது ஆசிரிய ரான பள்ளிகொண்டாபுரம். மா. வெங்கடகிருஷ்ணபிள்ளை அவர்களுடையது. அவர்கள் நாவலர் பெருமான் உபன் யாசத்தைப் பல ஊர்களில் கேட்டிருப்பதோடு இளங்காட் டில் பல நாட்கள் கேட்டதாக அடியேன் ஒருமுறை சந்தித் தபோது சொன்னார்கள். அந்நூல் நம் நண்பர் வித்வான். கி. வேங்கடசாமி ரெட்டியார் கைக்கு வந்து இருந்தது நல்லதாயிற்று. அப்புத்தகத்தையே வைத்துக்கொண்டு வேறொரு படிவம் எழுதவேண்டுமானால் பலமாதங்களாகும் அவ்வெழுத்துக்கள் நுண்ணியவைகள் மை சரியாகவும் படியவில்லை. கூர்ந்து பார்த்துத்தான் எழுதவேண்டும். பதிப்பு சாலீவாஹனஸு 1785ல் நிகழும் துந்துபிஸு சித்திரைமீ (கி. பி. 1862) இன்றைக்கு (1975) 113 வருடங்கள் ஆகின்றன. அடியேனிடத்தில், இந் நூலாசிரியரவர்கள் திருவவதார வருஷம் 76க்குச் சரியான

விசுவாவசுளு மாசிமீ 7உ (கி. பி. 1905) பதிப்பு ஒன்று 5—7—1917ல் கிடைத்து காப்பாற்றப்பட்டு இருந்தது. இப்பதிப்பு தெளிவான எழுத்துக்கள். இதன் ஆதரவைக் கொண்டு முதல் பதிப்பையும் ஒத்திட்டுப்பார்த்து ஒரு படிவம் எழுதினேன். 1905ம் பதிப்பில் பாயிரம் நீங்கலாக சாற்றுக்கவிகள் இல்லை. புதிதாகத் தனியன்கள் 5சேர்க்கப் பட்டிருக்கின்றன. நூலினுள் முதற் பதிப்பின் ஒரு விஷயம் இரண்டாம் பதிப்பில் விடப்பட்டது. புதிதாகச் சேர்ந்த பகுதியும் இருக்கின்றன. விட்டவை, சேர்ந்தவை இரண்டையும் இப்படிவத்தில் எழுதிவைத்தேன். தவிர முதற்பதிப்பில், 130ம் பக்கத்திலிருந்து 135ம் பக்கம் வரையில் 4 பக்கம் இரண்டு ஏடு இல்லாமலே போயிற்று. அப்பகுதியை 1905ம் வருஷப் பதிப்பால் நிறைவேற்றிற்று இவ்விரண்டு பதிப்புகள் இருந்ததினுலே நூல் குறைவின்றி நிறைவு பெற்றது. பாயிரம் 1. சாற்றுக்கவிகள் 12ம் நூலின் பிற்பகுதியாக்கிப் பதிப்பிக்கப்படுகிறது. இக் காலத்தவர்கள் சாற்றுக்கவிகள் வாங்காமலே பதித்தலே போல் செய்யலாம் என்று கருதினும், அவர் காலத்தி லிருந்த புலவர்கள் அவர்கள் சொன்ன செய்திகள் நம்மவர் களுக்கு ஓரளவு பயன்படும் என்றே அதனைச் சேர்த் துள்ளேன். முதற்பதிப்பு அழிந்து படுமானுல் அச்சாற்றுக் கவிகள் எங்ஙனம் பெறமுடியும். நம் நாவலர் பெருமான் செய்தருளிய நூலகளில் சேர்ந்திருக்கின்ற சாற்றுக் கவிகளை மட்டும் தொகுத்துப் பதிப்பிததோமானுல அக் காலத்து புலவர்களை நாம் தெரிநதுகொள்வதோடு பெருமானை அவர்கள் எப்படி எப்படியெலலாம் போறறி ஞர்கள் என்பது நமக்கு நன்கு விளஙகிவிடும். வாய்பபு கிடைத்தால் செய்வோம். "பால சம்வாத வினுவிடை" முதற்பதிப்பு உதவிய நம் சபைத்தலைவர் வி பூதூர். விதுவான் கி. வேஙகடேசாமி ரெட்டியாருககு வணககம்.

ஸ்ரீமத் ராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள்

திவ்ய திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

நன்ருக

# பால சம்வாத வினு விடை

என்னும்

# புருஷார்த்த தீபிகை

வி. கு. சதாசிவ செட்டியாரவர்கள்
கேட்டுக்கொண்டபடி, ஏ. வே. இராமாநுஜ
உபாத்தியாயரவர்களால் இயற்றப்பட்டது.

—:o:—

இஃது புதுவையில் தானப்பாசாரியரவர்கள்
கருத்தின்படி:— ஸ்ரீகாளஹஸ்தீசன் கோயில்
அருணுசல குருக்கள் அவர்களால்
சுப்பு—இராமசுவாமி முதலியாரவர்கள்
வித்தியாநிதி யந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.
சாலிவாஹனஶூ 1785ல் நிகழும் துந்துபிஶூ சித்திரைமீ

கி. பி. 1862 ஆகிறது.

வி. பூ .வே. அவர்கள் 1863 என்று குறித்துள்ளார்.

இந்த புத்தகத்தில் எந்தத்திருமண்ணும் எவ்விடத்தும் இல்லாமையோடு பாயிரத்தில் (உ) பிள்ளையார் சுழியும் அதன் கீழ் "ஸ்ரீராமஜெயம்" என்றும், நூலாரம்பத்தில்," தலைப்பில் "ஸ்ரீ" என்றும் கடைசி பேஜ் தலைப்பில் ஸ்ரீ என்றதின்கீழ் "நன்ருக" என்றிருக்கக் காண்கிறேம். இதனுல் ஆசிரியர் கொள்கை எதுவென்று நிச்சயிக்க

முடியுமா? ஏன் இதனை இங்கு எழுதுகிறேனென்ருல் 1958ல் புதுச்சேரியில் வி. பூதூர். புலவர். கி. வேங்கடசாமி ரெட்டியார் எழுதிய ஏ. வே. இராமாநுஜ நாவலர் சரித்திரச்சுருக்கம் வெளியிட்டார்கள் அதன் 14ம் பக்கம் "சிலமேன்மைக்குணங்கள்" என்ற தலைப்பில் "ஸ்ரீபெருந்தேவித் தாயார் பதிகத்தையும் ஸ்ரீதேசிகன் பதிகத்தையும் சேர்த்துப் புதுவை பொன்னரங்கம் பிள்ளை அவர்களைக்கொண்டு 1867ல் அச்சிட்டு வெளிப் படுத்தினுர் அப்பதிகங்கள் ஒவ்வொன்றின் முகப்பினும் வடகலைத்திருமண் அச்சிட்டிருக்கின்ருர்". என்றெழுதி யுள்ளார். மேலும் எழுதுகிருர் "இதனுல் இந்நாவலர் பிரானது நடுநிலைக்குணனும் சீரிய ஒழுக்கமும் நன்கு புலனுகிறது" என்று ஷை பொன்னரங்கம் பிள்ளையவர்களே பெரும் பொருள் செலவு செய்து அச்சிட்ட "பாத்மோத்தர புராண"த்தில் பெரிய தென்கலைத்திருமண் அச்சிட் டிருக்கிருர் இதனுல் நாவலர் பெருமான் எக்குறி இட்டுக் கொள்ளுதல் சாத்திரமுறை என்று தீர்மானமில்லாதவரா? அவர் உபதேசம் நூல்களில் குறிப்பிடுதல் அநுஷ்டானம் இவைகளைக்கொண்டு தெரிந்து கொள்வது நலம். அத் வைதம் சைவம் வடகலைத் தென்கலை பேத புத்தியின்றி வாழ்தல் நடுநிலைக்குணம் சீரிய ஒழுக்கம் ஆகுமா? சிந்திக்க.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பால சம்வாத வினு விடையென்னும் புருஷார்த்த தீபிகை

இஃது

புதுவை ஸ்ரீமான் ஏ. வே. விலக்ஷணகவி

இராமாநுஜ நாவலர் சுவாமிகளால்

அருளிச் செய்யப்பட்டது.

இந்நூலாசிரியவர்கள் திருவடி சம்பந்திகளில்

புதுவை முத்தியாலுபேட்டை

ஸ்ரீமான் சு. ஸ்ரீ பராங்குச ராமாநுஜ தாஸரவர்கள்

திருச்சித்ரகூடம் புஷ்பகைங்கரியம்

ஸ்ரீமான். ஸ்ரீ ராமாநுஜ தாஸரவர்கள்

வலயமாதேவி

ஸ்ரீமான் முதனுட ஸ்ரீநிவாசராமாநுஜ தாஸரவர்கள்

ஷை ஊர் ஸ்ரீமான் கொங்கராய

ஸ்ரீ பூவராகப் பெருமாள் ராமாநுஜ தாஸரவர்கள்

முதலிய பாகவதோத்தமர்கள் முயற்சியால்

புதுவை குருசாமிப் பிள்ளையவர்களது

திருவள ரேந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது

இந்நூலாசிரியரவர்கள்

திருவவதாரஞூ 76க்குச் சரியான விசுவாசுஞூ மாசிமீ

இதன் கூரணிக்கை அ௺—ரூ.

(கி. பி. 1905 பதிப்பு)

ஸ்ரீ:

புதுவை விலக்ஷண கவி ஏ. வே. இராமாநுஜ நாவலர் ஸ்வாமிகள் அருளிய நூல்களுக்கு சாற்றுகவிகள் அருளிய அக்காலப் புலவர்கள் திருநாமங்கள்

## பாத்மோத்தர புராணத்தில்

## தமிழ் சாற்றுக்கவிகள்

1. ஸ்ரீகோமளபுரம் ராஜகோபாலப் பிள்ளையவர்கள் பாட்டு 14
2. ஸ்ரீ வித்வான் சுப்பராயப் பிள்ளையவர்கள் பாட்டு 1
3. ஸ்ரீ திருமணம் கேசவசுப்பராய முதலியாரவர்கள் பாட்டு 2
4. காசி விசுவநாத முதலியாரவர்கள் பாட்டு 2
5. ஸ்ரீ புதுவை பொன்னு உபாத்தியாயரவர்கள் பாட்டு 2
6. ஸ்ரீ புதுவை எலிக்கோட்டு துரைசாமி நாயகரவர்கள் பாட்டு 1
7. ஸ்ரீ புலியூர் இராமாநுசப்புலவர் பாட்டு 1
8. ஸ்ரீ புதுவை ஜெயராம செட்டியாரவர்கள் பாட்டு 2
9. ஸ்ரீ சொற்கபுரம் இராமலிங்கத் தம்பிரானவர்கள் பாட்டு 3
10. ஸ்ரீ திரிசிரபுரம் கோவிந்தப்பிள்ளை அவர்கள் பாட்டு 2
11. ஸ்ரீ காஞ்சீபுரம் வித்வான் இராமசாமி நாயகரவர்கள் பாட்டு 9
12. ஸ்ரீ திருநீர்மலை இராசகோபாலப் பிள்ளையவர்கள் பாட்டு 1
13. ஸ்ரீ கோ. பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள் பாட்டு 1
14. ஸ்ரீ கோயம்பேடு வேட்கடரங்க ராமாநுசப் புலவர் பாட்டு 2
15. ஸ்ரீ புதுவை அவோக்கா கோவிந்தசாமி நாயகரவர்கள் பாட்டு 2
16. ஸ்ரீ புதுவை அவோக்கா கோவிந்தசாமி நாயகரவர்கள் பாட்டு 1
17. ஸ்ரீ புதுவை வைத்தியம் முத்துகிருஷ்ணசாமி நாயக்கர் அவர்கள் பாட்டு 1
18. ஸ்ரீ செ. அப்பாவு உபாத்தியாயரவர்கள் பாட்டு 3
19. ஸ்ரீ ஜோதிடம் அப்பாசாமிப் பிள்ளை அவர்கள் பாட்டு 1

20. ஸ்ரீ திருக்குடந்தை வாசுதேவப்பிள்ளையவர்கள் பாட்டு 1
21. ஸ்ரீ புதுவை ராகவுலு நாயகரவர்கள் பாட்டு 1
22. ஸ்ரீ தி. விசாகப்பெருமாளையர் பாட்டு 1
23. ஸ்ரீ புரசை சபாபதி முதலியாரவர்கள் பாட்டு 1

55

ஸ்ரீ:

## பாத்மோத்தர புராணத்தில் ஸமஸ்க்ருத வித்வான்கள் தந்த

## ஸமஸ்க்ருத சாற்றுக்கவிகள் திருநாமங்கள்

1. ஸ்ரீ திருவகீந்திரபுரம் வித்வான் இராமாநுஜாசாரியார் ஸ்லோகம் 2
2. ஸ்ரீ தருமபுரி பண்டிதசிகாமணி சடகோபாசாரியவர்கள் ஸ்லோகம் 3
3. ஸ்ரீ கோ. வே. வேதாந்தாசாரியரவர்கள் ஸ்லோகம் 1
4. ஸ்ரீ கோ. வே வரதாசாரியவர்கள் ஸ்லோகம் 1
5. ஸ்ரீ சக்கிரம் ராகவாசாரியவர்கள் ஸ்லோகம் 2
6. ஸ்ரீ கச்சிக்கடாம்பி தேவநாதாச்சாரியவர்கள் ஸ்லோகம் 3
7. ஸ்ரீ கொ. இ. இராமாநுஜாச்சாரியவர்கள் ஸ்லோகம் 2
8. ஸ்ரீ வித்வான் மாடபூசி பகவத்விஷயம் ஸ்வாமிகள் ஸ்லோகம் 2
9. ஸ்ரீ இளையவல்லி இராமாநுஜாசாரியவர்கள் ஸ்லோகம் 2
10. ஸ்ரீ திருமலை ஈச்சமபாடி வேதாந்த ராமாநுஜாச்சாரியவர்கள் ஸ்லோகம் 1
11. ஸ்ரீ தேரணி நடாதூர்வம்சம் வேங்கடவரதாசாரியாரவர்கள் ஸ்லோகம 2
12. ஸ்ரீ சொ வெ. வேங்கடாசாரியாரவர்கள் ஸ்லோகம் 1
13. ஸ்ரீ குத்தமூர் அமிர்தகண்டம் சின்னசாமி சாஸ்திரியாரவர்கள் ஸ்லோகம் 6
14. ஆதிருக்கோவலூர் சின்னசாமி ஐயயங்காரவர்கள் தமிழ் விருத்தம் ஸ்லோகம் 1

ஸம்ஸ்க்ருத சாற்றுப்பாக்கள் 29

## "ஸ்ரீ சூர்ண விளக்கம்"

### ஸம்ஸ்க்ருத சாற்றுப்பாக்கள் தமிழ் உரையுடன்.

1. ஸ்ரீ ஸ்ரீபெரும்பூதூர் புதுப்பேர் இளையவில்லி இராமாநுஜாசாரியர் ஸ்லோகம் 2
2. ஸ்ரீ இந்தூர் மஹாவித்வான் நரசிம்ஹாசாரிய ஸ்வாமிகள் ஸ்லோகம் 1
3. ஸ்ரீ கபிஸ்தலம் அனந்தாசாரிய ஸ்வாமிகள் ஸ்லோகம் 4
4. ஸ்ரீ ஸ்ரீபெரும்பூதூர் பரவஸ்து இராமாநுஜாசாரியார் ஸ்லோகம் 3
5. ஸ்ரீ ஸ்ரீபெரும்பூதூர் ஈயுண்ணி ஸ்ரீநிவாசாசாரியர் ஸ்லோகம் 2
6. ஸ்ரீ திருவகீந்திரபும் கடாம்பி தேவநாதாசாரியார் ஸ்லோகம் 2
7. ஸ்ரீ திருவகீந்திரபுரம் அஷ்டாவதானம் அனந்தாசார்யர் ஸ்லோகம் 3
8. ஸ்ரீ ராஜமன்னுர் சந்நதி நல்லான் சக்ரவத்தி கோபாலாசார்யர் ஸ்வாமி ஸ்லோகம் 1
9. ஸ்ரீ கொந்தமூர்வேலாமூர் ஸோமயாஜி வரதாசாரியஸ்வாமி ஸ்லோகம் 1
10. ஸ்ரீ பாணம் ஸோமயாஜி வேங்கடாசாரியர் ஸ்லோகம் 1
11. ஸ்ரீ கொந்தமூர்வேலாமூர் வகுளாபரணம் சோமயாஜி இராகவாசாரியார் ஸ்லோகம் 2
12. ஸ்ரீ கொந்தமூர்வேலாமூர் வகுளாபரணுசாரியர் ஸ்லோகம் 1
13. ஸ்ரீ திருவகீந்திபுரம் தேவநாதாசாரியர் ஸ்லோகம் 5
14. ஸ்ரீ திருநறையூர் காரப்பன்காடு கடாம்பி திருவேங்கடாசாரியார் ஸ்லோகம் 2
15. ஸ்ரீ காஞ்சீபுரம் ஏகாம்பர சாஸ்திரிகள் ஸ்லோகம் 2

ஸம்ஸ்க்ருத சாற்றுப்பா 32

### ஸ்ரீ சூர்ணவிளக்கத்துக்கு தமிழ்சாற்றுப்பா

1. ஸ்ரீ கவித்தலம் துரைசாமி மூப்பனுரவர்கள் செய்யுள் 1
2. ஸ்ரீ கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள் செய்யுள் 1

3. ஸ்ரீ காஞ்சீபுரம் இராமசாமி நாயுடு அவர்கள் செய்யுள் 1

தமிழ் சாற்று பாக்கள் 3

ஸ்ரீவைஷ்ணவதத்வம் சாற்றுக்கவிகள்

1. ஸ்ரீ நூலாசிரியர் மாணாக்கர் வெ. வேதாந்த தேசிகப்பிள்ளையவர்கள் 4
2. ஸ்ரீ கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள் 1
3. ஸ்ரீ கா. வித்வான். இராமசாமி நாயகரவர்கள் 1
4. ஸ்ரீ தமிழ்ப்புலவர் சீநிவாச முதலியாரவர்கள் 1
5. ஸ்ரீ முடிச்சூர் அப்பாவு முதலியார் மாணவர் திரு இராஜகோபாலப்பிள்ளையவர்கள் 1
6. ஸ்ரீ தமிழ்த்தலைமைப்புலவர் ப. வாசுதேவ முதலியாரவர்கள் 1

சாற்றுப்பாக்கள் 9

வைராக்கிய சூரியோதயம் சாத்துக்கவி

1. ஸ்ரீ கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள் பாட்டு 1
2. ஸ்ரீ காஞ்சீபுரம். வித்வான். இராமசாமி நாயகரவர்கள் பாட்டு 1
3. ஸ்ரீ சொற்கபுரம் இராமலிங்கத்தம்பிரானவர்கள் பாட்டு 1
4. ஸ்ரீ பெங்களூர். பு. அப்பாசாமி ராமாநுஜதாசர் பாட்டு 1

சாற்றுக்கவிகள் 4

திருச்சித்திர கூடபுப்ராணம் சாற்றுப்பாக்கள்

1. ஸ்ரீ ப்ரபந்த வித்வான். கா. ராமசாமி நாயுடு அவர்கள் பாட்டு 1
2. ஸ்ரீ ப்ரபந்த கொ. பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள் பாட்டு 7
3. ஸ்ரீ நாவலர் திருக்குமாரர் சடகோபாயுடு அவர்கள் பாட்டு 1
4. ஸ்ரீ காட்டுப்புத்தூர். விஜயராமாநுஜ தாசரவர்கள் பாட்டு 2

5. ஸ்ரீ திரிசிரபுரம். ஜெ. சுந்தரராமாநுஜ தாசரவர்கள் பாட்டு 1
6. ஸ்ரீ புதுவை. வெங்கடராமாநுஜ தாசரவர்கள் பாட்டு 1

சாற்றுப்பாக்கள் 13

**ஸ்ரீசுதரிசனகிரிபுரணம் சாத்துப்பாக்கள்**

1. ஸ்ரீ காஞ்சீபுரம் ப்ரபந்த. வித்வான். இராமஸ்வாமி நாயுடு அவர்கள் பாட்டு 1
2. ஸ்ரீ வித்வான் கொ. பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள் பாட்டு 1
3. ஸ்ரீ நாவலர் ஸ்வாமி குமாரர் சடகோப நாயுடு அவர்கள் பாட்டு 7
4. திரிசிரபுரம். ஜெ. சுந்தரராமாநுஜதாசரவர்கள் பாட்டு 6

சாற்றுப்பாக்கள் 15

**ஸ்ரீபகவந்நாமம் சங்கீர்த்தனம் சாத்துக்கவிகள்**

1 ஸ்ரீ கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள் பாட்டு 1
2. ஸ்ரீ காஞ்சீபுரம். வித்வான் இராமசாமி நாயுடு அவர்கள் பாட்டு 1
3. ஸ்ரீ சொற்கபுரம் இராமலிங்கத்தம்பிரானவர்கள் பாட்டு 1
4. நாவலர் குமாரர் சடகோப இராமாநுஜ நாயுடு அவர்கள் பாட்டு 1
5. ஸ்ரீ வளவனூர். தேசிகப்பிள்ளை அவர்கள் பாட்டு 1
6. ஸ்ரீ புது. மிஷல். இராம. கோபாலராமாஜதாசரவர்கள் பாட்டு 3
7. ஸ்ரீ புதுவை வரயோகி ராமாநுஜதாசரவர்கள் பாட்டு 2
8. அரியாங்குப்பம். திருமழிசை யாழ்வாரவர்கள் பாட்டு 2

சாற்றுப்பாக்கள் 12

அரியிரு திருவடி மருவினவர்—என்றும்
அழிவறு நலமுறு திருவினவர். (நாமாவளி)

ஸ்ரீ:

புவனகிரி

# ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்



திரு அவதாரம் கி. பி. 7—7—1860 தீர்த்தம் கி. பி. 10—6—192

ஸ்ரீ:

புதுவை விலக்ஷணகவி

ஸ்ரீமத் ஏ. வே. இராமாநுஜ நாவலர் ஸ்வ



திரு அவதாரம் கி.பி. 1829.

திருநாடலங்கரித்தல் கி